# கல்கி

ஆகஸ்ட் 4
ஆண்டு
மலரில்



# சாண்டில்யன்

எழுதும்

# சரித்திரத் தொடர்

ஆரம்பம்

## சிவாஜியுடன் ஒரு மனம் திறந்த பேட்டி

# சொன்னதைச்

கேள்வி: அலகாபாத்திலுள்ள காங்கிரஸ்காரர்களே அமிதாப் பச்சனுக்கு எதிராகப் போராட்டம் நடத்துகிறார்கள். எதற்காக நடத்துகிறார்கள்? தேர்தலுக்குப் பிறகு அமிதாப்பச்சன் தொகுதிப் பக்கமே வரவில்லை; தொகுதியிலுள்ள பிரச்னைகளைப் பற்றி பார்லிமெண்டில் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை என்பதே அவர்களின் குற்றச்சாட்டு. இந்த விஷயத்தை எழுதிய பத்திரிகைகள் எல்லாமே, அமிதாப் பச்சன் மட்டுமல்ல; சினிமாக் கலைஞர்களாக இருக்கும் எந்த எம்.பி.யுமே பார்லிமெண்டில் பேசவில்லை என்றுதான் எழுதின. இதற்கு நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

சிவாஜி கணேசன்: பார்லிமெண்டில் சினிமாக் கலைஞர்கள் மட்டும்தானா பேசவில்லை? எத்தனையோ எம்.பிக்கள் பேசவில்லை! அதுபற்றி இந்தப் பத்திரிகைகள் எழுதவில்லையே, ஏன்?

கேள்வி: மற்ற எம்.பிக்களை விட்டுவிடுவோம். உங்களைப் போலுள்ள கலைஞர்களெல்லாம் இந்தியா முழுமைக்கும் தெரிந்தவர்கள். அதனால் நீங்கள் பார்லிமெண்டில் பேசுவதை மக்கள் எதிர்பார்க்கிறார்கள்; இல்லையா?



சிவாஜி: பார்லிமெண்டில்தான் பேச வேண்டுமா? பார்லிமெண்டில் பேசும்போது ஏதாவது தவறாகப் பேசிவிடும் வாய்ப்பு உண்டு. அப்படித் தவறாகப் பேசினால் எதிர்க் கட்சிக்காரர்களெல்லாம் கைகொட்டிச் சிரித்துக் கேலி செய்வார்கள் என்பதினால்தான் நான் கூட பார்லிமெண்டில் பேசவில்லை. ஆனால், அமைச்சர்களையெல்லாம் வீட்டில் சந்தித்துப் பேசுகிறேன். அவர்களும் நான் நேரடியாகச் சந்தித்த மரியாதையில் நான் சொல்லும் குறைகளைக் கேட்டு ஆவன செய்கிறார்கள்.

கேள்வி: அப்படி நீங்கள் என்ன செய்திருக்கிறீர்கள்?

சிவாஜி: ஓர் ஊருக்கு ரோடு போட வேண்டும்; பாலம் கட்ட வேண்டும் என்றெல்லாம் நான் கேட்க வேண்டியதில்லை. அதற்கு அந்தத் தொகுதி எம்.பிக்கள் இருக்கிறார்கள். நான், கலைஞர்களுக்கான இடத்தில்தான் நியமனம் செய்யப்பட்டிருக்கிறேன். எனவே, கலைஞர்களுக்கு ஏற்படும் பிரச்னைகளைப் பற்றி அவ்வப்போது எடுத்துச் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன்.

கேள்வி: நீங்கள் அப்படி எடுத்துச் சொல்லித் தீர்க்கப்பட்ட பிரச்னைகளில் ஏதாவதொன்றைக் குறிப்பாகச் சொல்ல முடியுமா?

சிவாஜி: அப்படியெல்லாம் — இதைச் செய்தேன் என்று எதையும் குறிப்பாகச் சொல்ல முடியாது.

கேள்வி: குறிப்பிட்டுச் சொல்லும்படியான ஒன்றைத்தான் மக்கள் உங்களைப் போன்றவர்களிடமிருந்து எதிர்பார்க்கிறார்கள் என்றேன்!

சிவாஜி: 'வேண்டாத மருமகள் கைபட்டால் குற்றம்; கால் பட்டால் குற்றம்' என்பது போல்தான் எங்களைப் பற்றிய செய்திகளைப் பத்திரிகைக்காரர்கள் பெரிதுபடுத்துகிறார்கள். எதுவும் செய்யாமல் எத்தனையோ எம்.பிக்கள் இருக்கும்போது எங்களைப் பற்றி மட்டும் எழுதுவானேன்?

கேள்வி: சென்ற ஆண்டு சென்னையில் நடந்த சிவாஜி ரசிகர் மன்ற மாநாட்டில் பேசும் போது, "வருடத்தில் இருநூறு நாட்களை அரசியலுக்காகவும் மற்ற நாட்களைத்தான் சினிமாவில் நடிப்பதற்காகவும் செலவழிக்கப் போகிறேன்" என்று நீங்களே பிரகடனம் செய்தீர்கள். ஆனால் நீங்கள் அப்படிச் செய்வதாகத் தெரியவில்லையே? சொன்னதைச் செய்யவில்லையே?

# செய்தாரா சிவாஜி?

சிவாஜி: எனக்குத் தமிழ்நாடு காங்கிரஸின் தலைவர் பதவி கொடுத்தால் அப்படிச் செய்வதாகச் சொன்னேனே தவிர, சாதாரண நிலையில் இருக்கும் போது அப்படிச் செய்வேன் என்று சொல்லவில்லை.

கேள்வி: நீங்கள் அரசியலுக்காகப் பெரும்பகுதி நேரத்தைச் செலவிடும்போதுதானே தலைவர் பதவியை எதிர்பார்ப்பதில் ஒரு நியாயம் இருக்க முடியும்?

சிவாஜி: கொடுத்துப் பாருங்கள் நான் எப்படிச் செயல்படுகிறேன் என்பதைத்தான் சொன்னேன்.

கேள்வி: உங்கள் ரசிகர் மன்றத்தினர் கூட உங்களைத் தலைவராக்க வேண்டும் என்றுதான் அவர்கள் நடத்திய மாநாட்டில் தீர்மானம் கொண்டு வந்தார்கள். ஆக, உங்கள் ரசிகர்கள் உங்களுக்குப் பின்னால் அணி திரண்டு நிற்கத் தயாராக இருக்கிறார்கள். நீங்கள்தான் முழுநேர அரசியல்வாதியாக — அவர்களின் தலைவனாக வழிகாட்டத் தயங்குகிறீர்கள். அதற்கு என்ன காரணம்?

**சிவாஜி:** அவர்கள் என்னைத் தலைவராக்க விரும்புவதில் தவறில்லை; ஆனால் அந்தப் பதவி எனக்குத் தேவையில்லை. ஏனெனில் எனக்கு நிறைய வேலைகள் இருக்கின்றன!

கேள்வி: என்ன வேலைகள் இருக்கின்றன?

சிவாஜி: கலை உலகம் என்னை நிராகரிக்கவில்லை. கலையின்மேல் எனக்கிருக்கும் காதல்; அந்தக் கலைக்கு என்மேல் உள்ள காதல் — இவை இன்னும் வற்றிப் போய் விடவில்லை. கலைத்தாயின் உண்மையுள்ள மகன் நான். அதனால் அங்குள்ளவர்கள் என்னைச் சீக்கிரம் வெளியில் விட மாட்டார்கள்.

கேள்வி: இப்போது நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள். ஆனால் ரசிகர் மன்ற மாநாட்டின் போதோ, 'ஒரு குமாஸ்தா எப்போதும் குமாஸ்தாவாகத் தான் இருக்க வேண்டுமா? அந்த குமாஸ்தா மானேஜர் ஆக விரும்புவதில் என்ன தவறு?' என்று பேசினீர்கள். அதாவது நீங்கள் தலைவர் பதவி வேண்டுமென்பதைத் தான் அப்படிச் சொன்னீர்கள். அப்போது சொன்னதற்கும் இப்போது சொல்வதற்கும் முரண்பாடு இருக்கிறதே. ஏன்? அந்தக் கலைத்தாய் அத்தனை சீக்கிரத்தில் உங்களை விட மாட்டாள் என்பது அப்போதே உங்களுக்குத் தெரியாதா?

சிவாஜி: நான் முழுக்க முழுக்கக் கலை உலகத்திலிருந்து விலகி அரசியலுக்கு வரப் போகிறேன் என்று எப்போது சொன்னேன்? நான் தலைவராக வேண்டுமென்பது என் பிள்ளைகளின் (ரசிகர்களின்) ஆசை. அப்படி என்னைத் தலைவராக்கினால் நான் மிகவும் திறமையாகச் செயல்படுவேன் என்றுதான் சொன்னேன்.



கேள்வி: நீங்கள் முழு நேரத்தையும் அரசியலுக்குச் செலவிடாதகாரணத்தால், உங்களைத்தலைவராக்கிப் பார்க்க வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கும் உங்கள் ரசிகர்களுக்கே ஒரு விரக்தி மனப்பான்மை வந்து விட வாய்ப்பிருக்கிறதே?

சிவாஜி: என் பிள்ளைகள் அப்படி ஒரு போதும் விரக்தியடைய மாட்டார்கள். ஏனென்னில் நான் அரசியலைத் தொழிலாகக் கொள்ள முடியாது. அப்படித் தொழிலாகக் கொண்டால் நான் எனது செலவுகளுக்கு என்ன செய்வேன்? யாரிடம் போய்க் கடன் கேட்பேன்? எனக்கு இதுவரை கொடுத்துத்தான் பழக்கமே தவிர, வாங்கிப் பழக்கமில்லை. கடந்த பொதுத் தேர்தலின்போது கூட எனது சொந்தப் பணத்திலிருந்துதான் சுமார் நான்கரை லட்சரூபாய் செலவழித்தேனே தவிர மற்றவர்களிடம் கேட்டுப் பெற்றுச் செலவழிக்கவில்லை.

கேள்வி: கடந்த ஐம்பது ஆண்டுகளாக நீங்கள் சினிமாவில் சாதிக்காத ஒன்றையா இனிமேல் சாதித்து விடப் போகிறீர்கள்? எதற்காக இன்னும் நீங்கள் அங்கே இருக்க வேண்டும்? முழு நேரமும் அரசியலுக்கு வந்துவிட வேண்டியதுதானே?

சிவாஜி: நான் முன்பே சொன்னேன். எனக்கு அரசியல் தொழில் அல்ல என்று. மேலும் எனது குழந்தைகள் (சொந்தக் குழந்தைகள்) இப்போதுதான் வளர்ந்து பெரியவர்களாகியிருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கைக்கு நான் எதையாவது செய்தாக வேண்டும். எனது அறுபதாவது வயதிற்குள் அதையெல்லாம் செய்து முடித்துவிடுவேன். பிறகு முழுநேர அரசியல்வாதியாகிவிடுவேன்.

கேள்வி: நான் கேட்பது, இனிமேலும் கலையுலகத்தில் நீங்கள் என்ன சாதித்து விட முடியும் என்று நம்புகிறீர்கள்; இதுவரை நீங்கள் சாதிக்காத ஒன்றையா இனி சாதிக்கப் போகிறீர்கள் என்பது தான்!

சிவாஜி: உதாரணத்திற்கு ஒரு டாக்டரை எடுத்துக் கொள்ளுங்கள். அவர் என்னதான் முழுநேர அரசியல் பணிகளைச் செய்தாலும் அவருடைய டாக்டர் தொழிலை அவரால் விட்டுவிட முடியுமா? அதுபோல்தான் நானும். முழுநேர அரசியலுக்குவந்தாலும் அவ்வப்போது கலைத்தாய்க்கும் என்னால் சேவை செய்யாமல் இருக்க முடியாது. அதில் சாதனை என்ற பேச்சுக்கே இடமில்லை. சேவை — கலைச் சேவை. அதுதான் எனக்கு முக்கியம்.

கேள்வி: உங்களுடைய கலைச்சேவையை விட அரசியல் சேவைதான் அதிகம் தேவை. அப்படித்தான் இப்போது உங்கள் ரசிகர்கள் நினைக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?

சிவாஜி: நான் எப்போதுமே காங்கிரஸ் தொண்டன்தான். ஆனால் கொஞ்சம் காஸ்ட்லி தொண்டன்; அவ்வளவுதான். நான் ஒரு நடிகனாகத்தான் வாழ்க்கையை ஆரம்பித்தேன். சாகும்போதும் ஒரு நடிகனாகத்தான் சாவேன்; மூவர்ண (காங்கிரஸ்) கொடியோடுதான சாவேன். பதவி கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் என்னை மதித்தாலும் மதிக்காவிட்டாலும் நான் கட்சிக்கு ஆற்ற வேண்டிய பணிகளைச்செய்துகொண்டேதான் இருப்பேன். இது என் உள்ளத்தின் அடித்தளத்திலிருந்து எழும் வார்த்தைகள். பதவிக்காகச் சொல்லப் படும் வார்த்தைகள் அல்ல என்பதை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

கேள்வி: பதவி கொடுத்தாலும் கொடுக்காவிட்டாலும் கட்சிப் பணி செய்து கொண்டே தான் இருப்பேன் என்கிறீர்கள். ஆனால், கடந்த பொதுத் தேர்தலின் போது, உங்கள் ரசிகர் மன்றத்தினருக்குத் தேர்தல் டிக்கெட் கொடுக்கவில்லை என்பதற்காக

# ராஜீவ் எப்படி அரசியலுக்கு வந்தார்?



மேனகாவுடன்
சஞ்சய் இறந்தவுடன் பழகலானார்
கொஞ்சம் நெருங்கிப் நிகழ்ச்சி
இந்திரா. இருவரும் அரசியல் மருமகன்
களை அலசுவார்கள். மூத்த கலக்கத்தைக்
சோனியாவுக்கு இது மேனகா
கொடுத்தது. ஒருநாள் இந்திரா, நியமிக்க
காவை ஒரு செக்ரட்டரியாக அதைத்
எண்ணியபோது சோனியா அவளை
தீவிரமாக எதிர்த்தார். "நீங்கள் இத்தாலி
செகரட்டரியாக்கினால், நான் என்றாராம்.
திரும்பிச் செல்கிறேன்'' "என்ன
இதைக் கேட்ட இந்திரா, சஞ்சய்க்கப்புறம்
செய்வது சோனியா? என்று
எனக்கு உதவி தேவையே!'' இல்
சொன்ன போது, "ஏன் ராஜீவ் கேட்டாராம்
லையா?'' என்று திரும்பிக்
சோனியா.
இதுதான் ராஜீவ் அரசியலில் நுழைந்த
கதையின் பின்னணி என்று எழுதியிருக்கிறது 'Savvy' என்ற ஆங்கிலப் பத்திரிகை!

தகவல்: எஸ். ஸ்ரீனிவாசன்.



கட்சியிலிருந்து ராஜிநாமா செய்தீர்களே, ஏன்? ஆக, கட்சியிடமிருந்து நீங்கள் சில எதிர்பார்ப்புகளை வைத்திருக்கிறீர்கள் என்றுதானே அர்த்தமாகிறது!

**சிவாஜி:** அப்படியல்ல. ஒவ்வொரு தேர்தலின் போதும் எனது பிள்ளைகளுக்காக சீட் கேட்பேன். அவர்கள் சமாதானம் சொல்வார்கள். நானும் சரியென்று விட்டு விடுவேன். ஆனால் கடந்த முறை என்னை யாரும் அழைத்துக் கூடப் பேசவில்லை. அதனால் ஏற்பட்ட வருத்தத்தை டெல்லி மேலிடத்திற்குத்தெரியப்படுத்தவேண்டும் என்பதற்காகத்தான் ராஜிநாமா செய்தேனே தவிர, ஆத்திரத்தால் செய்யவில்லை. பிறகு அவர்கள் சீட் ஒதுக்கியதும் திரும்பவும் எனது ராஜிநாமாவை நான் வாபஸ் வாங்கிவிடவில்லையா?

கேள்வி: ஆக, கட்சியின்மேல் உங்களுக்கு எப்போதுமே வருத்தம் இருக்கிறது. அந்த வருத்தத்தால் தான் கடந்த பொதுத் தேர்தலின் போதும் சரி, இடைத் தேர்தலின் போதும் சரி நீங்கள் முழுமூச்சோடு தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபடவில்லை என்று சொல்லலாமா?

**சிவாஜி:** எந்தத் தேர்தலாக இருந்தாலும் சரி, வேறு யாரை விடவும் நான்தான் ஆயிரக்கணக்கான மைல்கள் அதிகம் சுற்றுப்பயணம் செய்து பிரச்சாரம் செய்திருக்கிறேன். தேர்தல் பிரச்சாரத்தை ஒரு புனிதப் பயணமாகக் கருதுவதால்தான் அப்போதெல்லாம் நான் காவியுடை அணிந்து கொண்டு செல்கிறேன். அந்தச் சமயத்தில் நான் புலால் கூட அருந்துவதில்லை. சரியாகச் சாப்பிடாமல் கூடப் பிரசாரம் செய்வதும் நான்தான். எனது தேர்தல் பிரச்சாரப் படங்களைப் பார்த்த பிரதமர் ராஜீவ்காந்தி அவர்கள் கூட 'நான் விமானப் படை என்றால் நீங்கள் தரையிலுள்ள பீரங்கிப் படை' என்று என்னைப் பாராட்டியிருக்கிறார். வேறு எந்தக் கட்சிக்காரரை விடவும் நான் பத்து மடங்கு அதிகம் வேலை பார்த்திருக்கிறேன். இதை இல்லையென்று யாராவது நிரூபித்தால் நான் இப்போதே எனது எம்.பி. பதவியையும், கட்சி உறுப்பினர் பதவியையும் ராஜிநாமாச் செய்யத் தயாராய் இருக்கிறேன். நிரூபிக்கத் தயாரா?

கேள்வி: உங்கள் ரசிகர் மன்றத்தினருக்கென்று தனியாகத் தேர்தல் டிக்கெட் வாங்கி வெற்றியும் பெற்றிருக்கிறீர்கள். இந்த நிலையில் உங்கள் ரசிகர் மன்றத்தைச் சேர்ந்த எம். எல். ஏக்களுக்கென்று நீங்கள் ஏதாவது தனியான வேலைத் திட்டம் வைத்திருக்கிறீர்களா?

**சிவாஜி:** நிறைய வைத்திருக்கிறேன்.

கேள்வி: என்ன திட்டங்கள்?

**சிவாஜி:** அதைச் சொல்ல முடியாத இக்கட்டான சூழ்நிலையில்தான் நான் இருக்கிறேன்.

கேள்வி: சரி, சில நாட்களுக்கு முன்பு சென்னையில் நடந்த காங்கிரஸ் கட்சியின் நூற்றாண்டு விழாக் கூட்டத்தில் நீங்கள் கலந்து கொள்ளவில்லையே, ஏன்? அப்படி நீங்கள் கலந்து கொள்ளாததனாலேயே, பத்திரிகைகளெல்லாம் மூப்பனார் கலந்து கொண்டார் என்றும் சிவாஜி கலந்து கொள்ளவில்லையென்றும் பெரிதாகச் செய்தி போட்டனவே. அந்த அளவுக்கு நீங்கள் நடந்து கொள்ளலாமா?

**சிவாஜி:** அது திடீரென்று அவசரத்தில் கூட்டப்பட்ட கூட்டம். நான் அறுநூறு மைல்களுக்கு அப்பால் ஷூட்டிங்கில் இருந்தேன். அந்த அவசரத்திலும் நான் அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ள வேண்டுமென்று நூற்றாண்டு விழாக் குழுவின் தலைவரிடமிருந்து நீண்ட தந்தி வந்திருந்தது. நான் எனது இக்கட்டான சூழ்நிலையை எடுத்துச் சொல்லி, அந்தக் கூட்டத்தில் என்ன முடிவு எடுக்கப்பட்டாலும் ஏற்றுக் கொள்கிறேன் என்று பதில் அனுப்பியிருந்தேன். அவர்களும் எனது சூழ்நிலையைப் புரிந்து கொண்டு ஒப்புக் கொண்டு விட்டார்கள். அப்படி ஒப்புக் கொள்ளாமல் நான் அவசியம் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டுதான் ஆக வேண்டும் என்று அவர்கள் சொல்லியிருந்தால் நான் என் தலையைத் தனியாக எடுத்தாவது அனுப்பியிருப்பேன். அப்படிப்பட்டவன் நான். எனவே அதில் நான்கலந்துகொள்ளமுடியாமல்போனது சூழ்நிலை காரணமே தவிர எனது தவறுமில்லை; அவர்களுடைய தவறுமில்லை!

கேள்வி: நூற்றாண்டு விழாக் கொண்டாடும் இந்த நேரத்தில் நீங்கள் கட்சிக்காக என்ன செய்யப் போகிறீர்கள்?

**சிவாஜி:** தமிழகத்தையே திருவிழாக் கோலம் பூணச் செய்யப் போகிறேன்.

கேள்வி: வெறும் திருவிழாக் கோலம் மட்டும் போதும் என்று நினைக்கிறீர்களா? மக்களிடம் கட்சியை எடுத்துச் செல்ல வேண்டாமா?

**சிவாஜி:** I know how to do it!

கேள்வி: அதுதான் எப்படி என்கிறேன். சாதாரணமாகக் காங்கிரஸ்காரர்களெல்லாம் ஜமீன்தாரி மனப்பான்மை கொண்டவர்கள். மக்களோடு நெருங்கி ஐக்கியமாக மாட்டார்கள். அதனால்தான் மக்களோடு நெருங்கிப் பழகிய தி. மு. க., காங்கிர

லைத் தோற்கடிக்க முடிந்தது என்று சொல்லு வார்களே?

சிவாஜி: (சிரிக்கிறார்) அவர்கள் எப்படி மக்களோடு நெருங்கிப் பழகினார்கள் என்பது எனக்குத் தெரியாதா? (மறுபடியும் சிரிக்கிறார்).

கேள்வி: சரி, தமிழகத்தில் காங்கிரஸின் வளர்ச்சியின்மைக்கு வேறு என்ன தான் காரணம் என்கிறீர்கள்?

சிவாஜி: எங்கள் கட்சிக்கென்று சரியான பத்திரிகை இல்லை. இருக்கும் பத்திரிகைகளெல்லாம் தி. மு. க., அ. தி. மு. க.; ஆதரவுப் பத்திரிகைகளாகத்தான் இருக்கின்றன. அது எங்களுக்கிருக்கும் மிகப் பெரிய பலவீனம்தான்!

கேள்வி: அதனால் என்ன? நீங்களே ஒரு பத்திரிகை ஆரம்பிக்கலாமே?

சிவாஜி: அது மிகவும் 'காஸ்ட்லி'யான விஷயம். அதை ஆரம்பித்து நடத்துவதென்பது சாதாரண விஷயம் அல்ல. மேலும் எனக்குப் பத்திரிகை நடத்துவது பற்றி என்ன தெரியும்?

கேள்வி: சில விஷயங்களில் நீங்கள் உங்கள் பலத்தை உணராமல் பயப்படுகிறீர்களோ என்று சந்தேகப்படுகிறேன். எதையும் தைரியமாகத் துவங்க வேண்டாமா?

சிவாஜி: அரசியலைப் பொறுத்தவரை சில விஷயங்களில் நாணல் மாதிரி வளைந்து தான் கொடுக்க வேண்டும். அப்போது தான் அவ்வப்போது வரும் சூறைக் காற்றிலிருந்து தப்ப முடியும். அரசியலில் பணியும் பொறுமையும்தான் ராஜதந்திரம்.

கேள்வி: அளவுக்கு மீறிப் பொறுமையைக் கடைப்பிடித்தால் அதற்குள் வயதாகிவிடும் என்பதையும் சிந்திக்க வேண்டாமா?

சிவாஜி: (சிரிக்கிறார்) மொரார்ஜி என்பது வயதுக்குமேல்தான் பிரதமரானார். பெருந்தலைவரும் அறுபது வயதுக்கு மேல்தான் கிங் மேக்கரானார்!

கேள்வி: தமிழகத்தில் காங்கிரஸ் கட்சி தன் சொந்தக் காலில் நின்று ஆட்சியைப் பிடித்துவிடும் என்று நீங்கள் நம்புகிறீர்களா?

சிவாஜி: நிச்சயமாக அந்த அற்புதம் நடந்தே தீரும். தமிழக ஆட்சியைக் காங்கிரஸிடம் ஒப்படைக்க வேண்டும் என்பதுதான் என் உயிர் மூச்சே!

கேள்வி: யாரும் இப்படியென்று எந்த அற்புதமும் நடந்து விட முடியாது என்றுதான் சொல்லுவார்கள். ஆனால் நீங்களோ அற்புதம் நடந்தே தீரும் என்கிறீர்கள். எந்த நம்பிக்கையில் அப்படிச் சொல்கிறீர்கள்?

சிவாஜி: அண்ணன் (எம். ஜி. ஆர்.) அமெரிக்காவில் சிகிச்சைப் பெற்றுக் கொண்டிருந்த போது, நான் நடுப்பெரியவர் (ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்) அவர்களைச் சந்தித்து அண்ணன் உடல் நலம் குணமடைய ஆசி கேட்டேன். அப்




போது அவர் 'அற்புதம் நடக்கும்' என்று ஆசீர்வதித்தார்கள். அதுபோலவே நடந்தது. அந்த வார்த்தையைத்தான் எனது கட்சிக்கும் நம்புகிறேன்.

கேள்வி: சில வாரங்களுக்கு முன்னால் பாலா பழனூரிடம் பேசிக் கொண்டிருந்த போது "நான் சிவாஜியிடம் பேசினால் என்னை சிவாஜி கோஷ்டி என்றும் மூப்பனாரிடம் பேசினால் மூப்பனார் கோஷ்டி என்றும் முத்திரை குத்துகிறார்கள். அதனால்தான் நான் கட்சி நடவடிக்கைகளிலிருந்து ஒதுங்கியிருக்கிறேன்'' என்றார். இப்படிப்பட்டதொரு கோஷ்டி மனப்பான்மை இருப்பது நல்லதுதானா?

சிவாஜி: என்னை ஒரு கோஷ்டியாகக் குற்றம் சாட்டுகிறீர்களே...?

கேள்வி: பேசப்படுவதைத்தான் சொல்கிறேன்..

சிவாஜி: எனக்கு ஒரு போதும் கோஷ்டி மனப்பான்மையே கிடையாது. ஆனாலும் மற்றவர்களிடமிருக்கும் கோஷ்டி மனப்பான்மையால் பாதிக்கப்பட்டது நானே தவிர வேறு யாரும் அல்ல.

கேள்வி: இந்த பாதிப்பினால்தான் நீங்கள் மனம் சோர்ந்து போயிருக்கிறீர்களோ என்று கருதுகிறேன்.

சிவாஜி: எனக்குத் தன்னம்பிக்கை அதிகம். வானமே இடிந்து என் தலை மீது விழுந்தாலும் எனது தன்னம்பிக்கை மட்டும் குறையவே குறையாது. இல்லையென்றால் 'பராசக்தி' படத்தில் நான் நடித்த போது 'அவன் வசனம் பேசும் போது மீன் மாதிரி வாயைத் திறக்கிறான்' என்று சிலர் என்னை கேலி செய்ததையெல்லாம் பொருட்படுத்தாமல் இந்த அளவுக்கு வளர்ந்திருப்பேனா? ஒருநாள் இந்தத் தமிழகத்தின் ஆட்சிப் பொறுப்பை காங்கிரஸிடம் ஒப்படைக்காமல் நான் கண் மூட மாட்டேன் என்பதை உறுதியாகச் சொல்லிக் கொள்கிறேன்.

பேட்டி: **இளங்கோவன்.**

படங்கள்: **'சுபா' எட்வர்ட்.**

அட்டை வண்ணப்படம்: **யோகா.**

இலவசம்

பளபளக்கும் ஸ்டெய்ன்லெஸ்
ஸ்டீல் கிண்ணம்

புதிய

# பால் அடங்கிய
# ஃபாரெக்ஸ்
# திட உணவு

இரண்டு டின்கள் வாங்கும்போது

புதிய ஃபாரெக்ஸ் அதிக சுவையானது
புதிய ஃபாரெக்ஸ் அதிக முழுமையானது

நீங்கள் பாசத்துடன் ஊட்டும் ஒவ்வொரு கவளமும்
உங்கள் பாப்பாவின் வளர்ச்சிக்குச் சிறந்ததாகும்.




இவ்வாய்ப்பு தேர்ந்தெடுத்த சில ஊர்களில் மட்டும்
விசேஷ டின்களின்மீது ஸ்டாக் உள்ளவரை வழங்கப்படும்.

உடல் நலத்தின் உறைவிடம் — கிளாக்ஸோ

CLARION/B/GX/5/203 TML

# நரகமாகிவரும்



நாகர்கோவிலிலுள்ள மீனாட்சிபுரம் பஸ் நிலையத்திற்கு எதிரிலிருக்கும் முக்கிய வீதி இது. எதிர்புறத்தில் 'வாகனங்களை நிறுத்தக்கூடாது' என்று நகராட்சியினர் போர்டு போட்டிருக்கும் ஜீப் கார்களும், வேன்களும் நிறுத்தப்பட்டிருக்கும் காட்சி. எப்போதாவது ஆசைப்பட்டால் கூட நடைபாதையில் நடந்து செல்ல முடியாது; நடுரோட்டில்தான் நடந்து செல்ல வேண்டிய சூழ்நிலை!



கன்னியாகுமரிக்கு வரும் வெளிநாட்டவர் பார்க்க வேண்டும் என்பதற்காகவே நாகர்கோவில் — திருநெல்வேலி நெடுஞ்சாலை ஓரத்திலுள்ள மிகப் பெரிய சாக்கடைக் குட்டையும், குடிசைகளும்...

இது கீரைத் தோட்டம் போல என்று நினைத்துவிட வேண்டாம். திருவிதாங்கூர் முன்னாள் சமஸ்தான திவான் டாக்டர் சர். சி. பி. இராமசாமி அய்யரின் சஷ்டியப்தபூர்த்தி விழாவின் நினைவாக அமைக்கப்பட்ட பூங்காவின் லட்சணம்தான் இது!



# நாகர்கோவில்

திருவிதாங்கூர் மகாராஜாவினால் 1893-ம் ஆண்டு அமைக்கப்பட்ட இந்த மணிக்கூண்டில் மணி பார்த்து நீண்ட நெடுங்காலமாகி விட்டது. பழமை வாய்ந்த இந்த மணிக்கூண்டைப் பராமரிக்க நகராட்சியினரால் ஏன் முடியவில்லை என்பதுதான் புரியவில்லை!

பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் தொகை கணக்கெடுப்பார்கள். ஆனால் இந்த போர்டில் காணப்படும் நாகர்கோவில் நகராட்சியின் புள்ளி விவரங்களோ பதினைந்து ஆண்டுகளாக மாற்றப்படவேயில்லை!

நாகர்கோவில் என்று பெயர் வரக் காரணமாக இருந்த நாகராஜா கோவிலுக்குச் செல்லும் வழிகளில் இதுவும் ஒன்று. நடக்கும்போது மூக்கை அழுத்திப் பிடித்துக் கொண்டுதான் செல்ல வேண்டும்.

தகவல்: குளச்சல் இப்ராஹிம்.
படங்கள்: அற்புதம் போட்டோ சப்ளையர்ஸ்.


தந்திரமாவது மந்திரமாவது.. நெருப்புயா நடந்துக்கணும்!
தந்திரமா நடந்துக்கணும்!
போலீஸ் அதிகாரம் நிறுத்தணும்!
மேலிட ஐவர் குழு
அவர் கேட்கறார்!.. நான் சொல்றேன்.. இன்னும் ராணுவத்தைக் கொண்டு வந்து சட்டத்தை மீறுறவங்களைச் சுட்டுத் தள்ளணும்!
சோலங்கி
நிர்வாகம் பற்றி தினம் எங்கிட்ட ட்யூஷன் எடுத்துக் கணும்!


அமைச்சரவையிலும் 79% நடிகர்களுக்கு!
நான் சின்ன வயசிலே டிராமாவிலே நடிச்சிருக்கேன்!
எங்கப்பாவோட சின்ன மாமனாரோட கொள்ளுத் தாத்தா தெருக்கூத்துலே நடிச்சிருக்கார்!
நான் போன ஜென்மத்துலே நடிகனா இருந்தேன்னு ஜோஸ்யர் சொல்றார்!
ப.உ.ச.
வீரப்பன்


சிங்களவர்
தமிழ் ஈழ போராட்டக்காரர்
பண்டாரி
திம்பு
பேச்சு வார்த்தைகள்



கல்கி
1985 ஜுலை 7
மலர் 43 இதழ் 49
குரோதன ஆனி 23



# அன்புள்ள என். டி. ஆர்....

அன்புள்ள ஆந்திர முதல்வர் அவர்களுக்கு,

ஜனநாயகக் காவலர் நீங்கள் என்று கருதினோம். இ. காங்கிரஸ், ஜனநாயகத்தின் மீது நடத்தும் எதேச்சாதிகாரத் தாக்குதலைத் தடுத்து நிறுத்தக் கூடிய அரண் என்று நம்பினோம்.

பாஸ்கர ராவ், இ. காங்கிரஸுடன் இணைந்து நடத்திய சதிச் செயலை நீங்கள் முறியடித்த போது, அந்த ஜனநாயகப் படுகொலை முயற்சியை நீங்கள் தைரியமாக எதிர்த்து நின்று போராடி வெற்றி பெற்ற போது மெய்சிலிர்த்தோம்.

ஆனால்... ஆனால்... சமீப காலமாகத் தங்களைப் பற்றி எங்களுக்குத் தெரிய வரும் விஷயங்கள் கவலையளிப்பனவாய் உள்ளன. மனம் விட்டுக் கூறி விட எண்ணுகிறோம்.

மேலவையைத் தாங்கள் ஒழித்தது எமக்கு உடன்பாடில்லை என்றாலும் ஜனநாயக ரீதியில் ஆந்திர மக்கள் பிரதிநிதிகளின் உணர்வுகளை மதிக்க வேண்டும் என்று கருதி பிரதமர் இதற்கு இசைவளித்து விட்டார். சத்துணவுத் திட்டம், ஓய்வு பெறும் வயதைக் குறைப்பது போன்ற சில காரியங்களை நீங்கள் அமுல்படுத்த ஆரம்பித்துப் பிறகு வெற்றிகரமான வாபஸ் பெற்றுக் கொண்டதை நாம் குறை கூறவில்லை. யதார்த்த நோக்கில் ஒத்து வராத சில கருத்துக்களைப் பிடிவாதமாக அமுல் படுத்துவதைவிட வாபஸ் பெறுவது புத்திசாலித்தனமே.

ஆனால் நகர்ப்புற உச்ச வரம்புச் சட்டத்திலிருந்து உங்கள் குடும்பத்துக்குச் சொந்தமான ஸ்டூடியோவுக்கு மட்டும் விதிவிலக்கு அளித்திருக்கிறீர்களாமே, அது என்ன நியாயம்? அங்கு பழத் தோட்டமும் காய்கறித் தோட்டமும் இருப்பதாகக் கூறி யாரை ஏய்க்கப் பார்க்கிறீர்கள்? சென்னையில் கூட இப்படி சில தோட்டங்கள் இருப்பது உங்கள் செயலை நியாயப்படுத்தி விடாது. மத்திய அரசு வற்புறுத்தினாலும் சரி, 'ஆந்திரத்தில் நகர்ப்புற உச்ச வரம்பே கிடையாது' என்று சொல்லுங்கள்; சமநீதி பேசுங்கள் — உங்கள் துணிச்சலைப் பாராட்டலாம். அதை விட்டு, சட்டத்தில் சிக்காமல் நழுவப் பார்ப்பது ஒரு முதல்வருக்கு அழகா?

காங்கிரஸ் மேலிடமானது மாநில முதல்வர்களைத் திணிக்கிறது என்று குற்றம் சாட்டிய நீங்களே உங்கள் தெலுங்கு தேசம் கட்சியில் உட்கட்சி ஜனநாயகம் இல்லாமல் செய்துவிட்டீர்களே, தர்மமா? கட்சியின் சாசனத்தையே மாற்றி, எல்லா அதிகாரங்களையும் உங்களிடமே குவித்துக் கொண்டு, உங்கள் மாப்பிள்ளைக்கு மட்டுமே முக்கியத்துவம் தருகிறீர்கள். சோதனையான காலகட்டங்களில் உங்களுக்குப் பக்கபலமாக நின்ற உபேந்திரா போன்ற பலர் ஒடுக்கப் பட்டும் ஒதுக்கப்பட்டும் விட்டனர். இ.காங்கிரஸ் தலைமையின் செயல்பாட்டுக்கும் தங்கள் போக்குக்கும் இடையே அதிக வித்தியாசமில்லை என்றாகி விட்டது.

இந்த லட்சணத்தில் பாரத தேசம் என்ற அனைத்திந்தியக் கட்சியைத் துவக்கி நடத்தும் நோக்கம் தங்களுக்கு இன்னமும் இருப்பதாகச் சொல்கிறீர்கள். உட்கட்சி ஜனநாயகத்தை மதிக்காதவரிடம் நாட்டின் ஜனநாயகத்தை எப்படி ஒப்படைப்பது என்று நாங்கள் திகைக்கிறோம்.

சிந்திக்க வேண்டுகிறோம்.

இப்படிக்கு,
சகோதரத் தமிழர்கள்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா—பாரதியார்.



• கோர்ட்டுக்கு அழைத்துச் செல்லப்பட்ட போது...

# அவனா கொலை செய்தான்?

**சென்ற ஆண்டு பிப்ரவரியில் ஒன்பது பேரைக் கொலை செய்த ஜெயப்பிரகாஷுக்கு உயர்நீதிமன்றமும் தூக்குத் தண்டனையை உறுதிப்படுத்திவிட்டது. சென்ற ஜூன் மாதம் பத்தாம் தேதியே ஜெயப்பிரகாஷ் தூக்கிலிடப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அவனுடைய தந்தை சுப்ரீம் கோர்ட்டில் விசேஷ ரிட் மனு தாக்கல் செய்திருப்பதால் தற்காலிகமாகத் தண்டனை ஒத்தி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலையில் ஜெயப்பிரகாஷின் சொந்த ஊருக்குச் சென்று அங்குள்ள அவனின் உறவினர்களையும் ஊராரையும் சந்தித்துவிட்டு வந்த நமது நிருபர் ஜெயப்பிரகாஷைப் பற்றிய அவர்களின் அபிப்பிராயங்களையும், ஜெயப்பிரகாஷைக் கைது செய்து கொண்டு வந்த போலீஸாரின் மனக்குமுறல்களையும் எழுதுவதோடு, ஒன்பது பேரைக் கொன்று குவித்த அந்த வீட்டில் இப்போது குடியிருக்கும் இளைஞர்களின் பயங்கரமான அனுபவங்களையும் எழுதுகிறார்...**

தர்மபுரியிலிருந்து ஹோசூர் செல்லும் வழியில் உள்ளது வெள்ளிச்சந்தை என்னும் சிறிய கிராமம். அதுதான் ஒன்பது பேரைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கு தண்டனையை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் ஜெயப்பிரகாஷின் கிராமம்.

பஸ்ஸில் இருந்து இறங்கி 'ஜெயப்பிரகாஷின் வீடு எது?' என்று யாரைக் கேட்டாலும் சொல்லி விடுவார்கள்; அந்த அளவுக்குப் பிரசித்தமாயிருக்கிறது இப்போது! மெயின் ரோடு ஓரத்திலேயே வீடு. வீட்டிற்கு முன்பாக ஒரு சின்ன டீக்கடை.. நாங்கள் போன போது ஒரு பையன் ம அடித்துக் கொண்டு இருந்தான். ஒருவயதான அம்மாள்

கல்லாவுக்குப் பின்புறம் உட்கார்ந்திருந்தார். இன்னொரு நடுத்தர வயதுப் பெண்மணி, அடுப்பில் இட்லியே இறதா என்று பார்த்துக் கொண்டு இருந்தார். லட்சுமி அம்மாள் என்ற அந்த வயதான மூதாட்டிதான் ஜெயப்பிரகாஷின் பாட்டி. நான்கு வயதிலேயே ஜெயப்பிரகாஷின் அம்மா கிணற்றில் விழுந்து இறந்ததும், ஜெயப்பிரகாஷை வளர்க்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டவர்.

"என்ன ஆயா... உங்க பேரனுக்குத் தூக்குத் தண்டனை கொடுத்துட்டாங்களே?" என்றேம்.

"அந்தவேதனையைக்கிளறாதம்மா..நெஞ்சு பொறுக்கலியே அம்மா... ஒண்ணும் கேக்காதேப்பா தம்பி!"

அவர் கண்ணீரை இமைகள் அணை கட்டி நிற்க, இரண்டு நிமிடங்கள் மௌனமாய்க் கலைந்தன.

"சொந்த அக்காவைக் கொலை செய்யக் கூடிய அளவுக்கு என்ன நேர்ந்தது?"

"இந்தக் கையாலே, நான்தாம்பா அந்த இரண்டுகளையும் வளர்த்தேன். என் பேத்தி ரொம்ப நல்லவ. ஒரு கடுஞ்சொல் பேச மாட்டா! இந்தப் பேப்பர் காரனுங்க என்ன வெல்லாமோ எழுதிட்டாங்களே? ஏம்பா இந்தப் பேப்பர்காரங்க பொய்தான் எழுதுவாங்களா?

"அந்த விசயத்தைக் கேட்டு இந்தக் கிராமத்துல யாருமே நம்பல... தெரியுமா? ஜெயப்பிரகாஷா அப்படிப் பண்ணினான்னு ஒத்தரு கொருத்தர் கேட்டுக்கறாங்க! ஏன்னா, அவன இந்தக் கிராமத்துல அப்படி இருந்தவன் தம்பி. பள்ளிக்கூடம் படிச்சிக்கிட்டு இருந்த வரையில், வீடு உண்டு, பள்ளிக்கூடம் உண்டு என்று இருப்பான். நேரம் கிடைத்தால் எங்க கழனிப் பக்கம் போய் வருவான். யார் எது கேட்டாலும், கேள்விக்குப் பதில்தான். தர்மபுரியிலே காலேஜ்ல சேர்த்தோம். அங்கே ஹாஸ்டல்லே தங்கிப் படிச்சான். கொஞ்ச நாள் வேலையில்லாமல் இருந்தான். அவங்கக்காதான் வந்து கூட்டிக்கிட்டுப் போச்சு. என் பையன்கிட்ட (ஜெயப்பிரகாஷின் அப்பா) கூட சொன்னேன், 'டேய்! அங்கே அவன் இருக்க வேணும்டா. வேலை இல்லாட்டியும் பரவாயில்லே; நம்ப கூடவே இருக்கட்டும்'னு. எங்க நிலைமை இப்படி சந்தி சிரிக்கணும்னு இருக்கறப்போ எப்படி அதெல்லாம் நடக்கும்!"

லட்சுமி அம்மாளுக்கு வயது அறுபது ஆகிறது. நமது புகைப்படக்காரர் காமிராவை கையிலெடுத்ததும், "ஐயோ! அதெல்லாம் வேண்டாம் தம்பி!" என்று கடைசி வரையில் படம் எடுக்கக் கூடாதென்று மறுத்து விட்டார்.

# "எங்கள் கிராமமே நம்பல!"

## —ஜெயப்பிரகாஷின் பாட்டி கூறுகிறார்



• வெள்ளிச்சந்தையிலுள்ள வீடு.

முப்பது வருடங்களாகக கடை வைத்திருக்கிறார்கள். டீக்கடைதான் என்று இல்லை; சைக்கிள் ரிப்பேர்க் கடை; மளிகைக் கடை என்று மாற்றி மாற்றி வைத்திருக்கிறார்கள். நடுவில் ஒரு வருடம் எந்தக் கடையும் வைக்காமலும் இருந்திருக்கிறார்கள்.

''தர்மபுரியிலே ஜெயப்பிரகாஷுக்கு வாத்தியாராக இருந்த தம்பி ஒண்ணு இந்த விசயத்தைப் பத்தித் தெரிஞ்சவுடன் 'அப்படியா! ஜெயப்பிரகாஷ் செய்திருக்க மாட்டானே'ன்னு சொல்லிச்சு. அந்த அளவுக்கு அவன் நல்லவன்'' என்று முத்தாய்ப்பு வைக்கிறார் லக்ஷ்மியம்மாள்.

நாம் மேலும் மேலும் ஜெயப்பிரகாஷைப் பற்றிக் கேட்ட போது லட்சுமி அம்மாள் சற்றுச் சலித்துக் கொண்டார்.

''இதையெல்லாம் தெரிஞ்சுக்கிட்டு நீ என்ன பண்ணப் போறே. ஒண்ணையும் கிளறாதே!''

அதற்குள் டீ அடித்துக் கொண்டிருந்த பையன் வந்தான்.

''டேய், திருவேங்கடம், —, இவங்க என்னமோ கேக்கிறாங்க — சொல்லுடா!''

திருவேங்கடம் ஜெயப்பிரகாஷின் தம்பி — ஜெயப்பிரகாஷுடைய அப்பாவின் இரண்டாவது மனைவியின் மகன். குடும்பத்தில் நடந்த துயரச் சம்பவங்களுக்குப் பிறகு அவன் படிப்பு அப்படியே நிற்கிறது. திருவேங்கடத்தின் தங்கை சாந்தாவுக்கும் (வயது 13) அதே நிலைதான்!

''அண்ணன் அடிக்கடி வேலூர் ஜெயிலிலிருந்து கடிதாசு போடுது'' என்றான் அவன்.

''ஏதாவது ஒரு கடிதாசைக் காமியேன்!''

''இல்லைங்க. எந்த கடிதாசு வந்தாலும் படிச்சிட்டுக் கிழிச்சுப் போட்டு விடுவோம். ஒரு கடிதாசுல 'கல்கி' பத்திரிகை நிருபர் என்னைச் சந்திக்க ஜெயிலுக்கு வந்திருந்தார்; ஆனால் நான் சந்திக்கவில்லை'ன்னு எழுதியிருந்தது.''

''காலேஜ்ல படிக்கும் போது கராத்தே கற்றுக் கொண்டானா?''

''அது எனக்குத் தெரியாது ஸார்! ஆனால் கல்கியில் 'கற்றுக் கொள்ளுங்கள் கராத்தே' என்ற தொடர் வந்த போது தொடர்ந்து அதை எங்க அண்ணன் படிச்சுக்கிட்டு வந்தது எனக்குத் தெரியும்'' என்றான்.

வெளியில் போயிருந்த லட்சுமி அம்மாள் மீண்டும் வந்தார்.

''நாங்கள்ளாம் விசயத்தைக் கேட்டுட்டு குய்யோ முறையோ'ன்னு மதருஸுக்கு ஓடின போது இவன் மட்டும் (திருவேங்கடம்)



## விருகம்பாக்கம்

**ஜெ**யப்பிரகாஷால் ஒன்பது கொலைகள் செய்யப்பட்ட அந்த வீடு இப்போது எப்படி இருக்கிறது? அங்கும் நேரில் சென்றோம். விருகம்பாக்கம் — பழனியப்பா நகரில் உள்ள அந்த வீட்டில் தற்போது இலங்கையிலிருந்து அகதிகளாய் வந்துள்ள தமிழ் இளைஞர்கள் பதினைந்து பேர் தங்கியிருக்கிறார்கள். அவர்களில் ஒருவரான சந்திரனை விசாரித்த போது நம்பவே முடியாத சில தகவல்களைச் சொன்னார்.

''நாங்க இந்த வீட்டுக்கு மார்ச் மாதம் (பிப்ரவரியில் கொலைகள் நடந்தன) குடிவந்தோம். எதிர்வீடு, பக்கத்து வீடு, பின்னால் உள்ள வீடு எல்லாம் காலியாக இருந்தன. எல்லோரும் பயந்துபோய்க் காலி செய்துவிட்டுச் சென்று விட்டார்கள். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும், செவ்வாய்க்கிழமையும், நம்மை நடுங்க வைக்கக் கூடிய அளவுக்குச் சில அனுபவங்கள் ஏற்பட்டுக்கொண்டிருக்கின்றன. இரண்டு தினங்களிலும் சரியாக இரவு பன்னிரண்டு மணியிலிருந்து இரண்டு மணிவரை ஒருவித துர்நாற்றம் வீசுகிறது. ரத்த வாடை அடிக்கிறது. மீன் அழுகிப் போனால் ஒருவிதத்துர்நாற்றம் அடிக்குமே, அதுபோன்ற துர்நாற்றம் அடிக்கிறது. ஒருநாள் நாங்கள் தாழ்வாரத்தில் படுத்திருந்தோம். திடீரென்று மூச்சு முட்டியது. யாரோ நெஞ்சைப் பிடித்து அழுத்துகிற மாதிரி...! எழுந்து பார்த்தால் யாரையும் காணோம். பயமாகப் போய் விட்டதால் வெளியிலுள்ள ரோடில் போய் உட்கார்ந்து கொண்டேன். பிறகு உள்ளே பார்த்தால்... கொலை செய்யப்

தனியா இங்க இருந்தான். போலீஸ்காரங்க உள்ளே பூந்து எங்க பாப்பாவின் (ஜெயப்பிரகாஷின் அக்கா) படத்தை எடுத்துக் கொண்டு போயிட்டாங்க. ஏன் தம்பி, அதைத் திருப்பி வாங்கித் தர உன்னால் முடியுமா?'' என்று அந்த அம்மாள் கேட்டது மனத்தை நெகிழ்ச்சியுறச் செய்தது.

''ஏம்பா, என்னல்லாம் எழுதிணுங்க. யாரையாவது கேட்டாங்களா? எங்க பாப்பா, தம்பியைத் திட்டவே திட்டாது. ரொம்பப் பாசத்தோடு இருக்கும். 'சோறு போடலே. திட்டிணுங்க'ன்னு கன்னாபின்னான்னு பத்திரிகைக்காரங்க எழுதிணுங்களே இது நியாயம் தானா?''

''ஏன் ஆயா? உங்க பேரனே குற்றத்தை ஒத்துக் கொண்டானே?''

''ஏன் தம்பி, ஒத்துக்க மாட்டான். இருட்டு ரூம்ல வைச்சுக் கையை, காலே உடைக்கிற மாதிரி அடிச்சா எல்லாத்தையும் தான் ஒத்துக்குவான்.''

''அப்ப, உங்க பேரன் ஒண்ணும் தெரியாதவன்னு சொல்றீங்களா?''

''நீ ஒண்ணும் கேட்காதே தம்பி. இதுக்கு மேல் இந்த விஷயத்தைப் பற்றிப் பேச முடி

## மனம் குமுறும் போலீஸார்

கொலை செய்த ஐம்பத்தொரு மணி நேரத்தில் ஜெயப்பிரகாஷைக் கண்டுபிடித்த பெருமை விருகம்பாக்கம் போலீஸ்காரர்களைச் சாரும். ஆனால் அவர்கள் பணிக்குப் பாராட்டு? திருப்பதிக்கு ஒரு மணி நாற்பது நிமிடங்களில் போலீஸ் பஸ்ஸை ஓட்டிச் சென்ற போலீஸ் டிரைவர் ஒரு நிமிடம் தாமதித்திருந்தாலும், ஜெயப்பிரகாஷைப் பிடிக்க இன்னும் பல நாட்கள் ஆகியிருக்கும். அதே போல் நாற்பத்து நான்கு மணி நேரங்களாக எந்தவிதமான ஓய்வுமின்றிப் பல்வேறு இடங்களுக்கும் சென்று சாட்சிகளைக் கொண்டு வந்த போலீஸ்காரர்கள்—குறிப்பாக போலீஸ் டிரைவர் பாராட்டுக்குரியவர். ஆனால் அவர்களெல்லாம் உரிய முறையில் பாராட்டப்பட்டிருக்கிறார்களா? அண்ணா மெடல் உண்டா? எதுவும் கிடையாது. இன்ஸ்பெக்டர் எந்த வித பிரமோஷனும் இல்லாமல் சிதம்பரத்துக்கு மாற்றப்பட்டிருக்கிறார். 'இதுபோல் பாராட்டு, ஊக்கம் இல்லாமல் இருப்பதால் தான் எங்களுக்கு உற்சாகம் குறைந்து பணியில் நாட்டம் குறைகிறது' என்றார் அந்தப் போலீஸ்காரர்களில் ஒருவர்.



## வீட்டில்...

பட்டுப் பிணங்களைப் போட்டிருந்த அறையிலிருந்து ஒரு சின்னக் குழந்தை, காலில் கொலுசு சத்தம் கேட்க வெளியில் வந்தது. பிறகு மெதுவாக அந்தக் குழந்தை கிணற்றுப் பக்கம் போனது. எனக்கு மயக்கமே வந்து விடும் போலிருந்தது. நாலு வீடுகள் தள்ளிப் போய்க் கோணியில் என்னை மூடிக் கொண்டு இரவைக் கழித்தேன்.

''மற்றொரு நாள் இரவு நேரம். என் நண்பன் பின்புறச் சுவரருகில் நின்று கொண்டிருந்தான். பதினைந்து அடி தூரத்திலிருந்த கிணற்றடியில், அழகான பெண் ஒருத்தி நின்று கொண்டு கையைக் காட்டி என் நண்பனை அழைத்தாள். அவன் சத்தம் போட்டு எங்களையெல்லாம் கூப்பிட்டுக் காட்டுவதற்குள் அந்தப் பெண் உருவம் மறைந்து போய் விட்டது. சில சமயங்களில் பிணங்கள் இருந்த அறையில் இருந்து குழந்தைகள் சிரிக்கும் சப்தமும், அழுகைக் குரலும் கேட்கின்றன. பெரியவர்கள் நடமாடுவது போலவும் இருக்கின்றன. இங்கு வந்ததிலிருந்து என் நண்பர்கள் பலர் நோய் வந்து நோஞ்சானாகப் போய் விட்டார்கள். ஆனால் நாங்கள் இந்த வீட்டில் குடிவந்த பிறகுதான் காலி செய்து கொண்டு போன அக்கம் பக்கத்துக்கு வீட்டுக்காரர்கள் மீண்டும் குடி வந்தார்கள்!'' என்றார் சந்திரன்.

பிணங்கள் வைக்கப்பட்டிருந்த அந்த அறைக்குச் சென்று பார்த்த போது சுவரில் ரத்தம் தோய்ந்த குழந்தைகளின் கைச்சுவடுகள் அப்படியே இருந்தன. ''என்ன சுத்தப் படுத்தியும் அவை அழியவில்லே!'' என்றார் அந்த இளைஞர்.

யாது...'' என்று மௌனமாகி விட்டார் அவர்.

இதற்குள் டீ சாப்பிட வந்திருந்த இரண்டு, மூன்று பேரிடம் ஜெயப்பிரகாஷைப் பற்றி விசாரித்தோம். எல்லோருமே சொல்லி வைத்தாற் போல 'நம்பவே முடியலீங்களே. சின்ன வயசிலிருந்து அவனை நாங்கபார்க்கிறோம்'' என்று குடும்பத்தினரும், தெரிந்தவர்களும் சொல்கிறார்களே தவிர அதற்கான காரணங்களைக் கேட்டால் சொல்ல முடியாமல் தவிக்கிறார்கள்.

ஜெயப்பிரகாஷின் அப்பா கோவிந்தசாமிக்குக் கழனியும் உண்டு. மழை பெய்தால் நல்ல வெள்ளாமை. சேர்த்து வைத்திருந்த சொற்பப் பணத்தையும் ஜெயப்பிரகாஷின் கேஸ் விவகாரங்களில் இழந்துவிட்டு, இப்போது கடனாளியாக நிற்கிறார் அவர். ஜெயப்பிரகாஷுக்கு ஆஜராகும் வக்கீல் தஞ்சாவூர்க்காரர். அதனால் அடிக்கடி தஞ்சாவூருக்குப் போகிறார். நான் போயிருந்தபோதுகூட வக்கீலைப் பார்ப்பதற்குத் தஞ்சாவூருக்குச் சென்றிருப்பதாகத்தான் சொன்னார்கள்.

இறந்த தேசிகாராணியின் கணவர் வீடு வெள்ளிச்சந்தையில் இருந்து ஆறு கி. மீ. தொலைவில் உள்ள மாரண்டஹல்லி என்ற ஊரில் இருக்கிறது. சென்ற வருடம் நடந்த அந்தச் சம்பவத்திற்குப் பிறகு ராணியின் மாமியாருக்குப் புத்தி சற்று பேதலித்துவிட்டதென்றும், மாமனார், அவருடைய அண்ணன் வீட்டில் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார் என்றும் சொன்னார்கள். எந்த ஊருக்குச் செல்வதானாலும் ராணியின் மாமனார் வெள்ளிச்சந்தை வழியாகத்தான், செல்ல வேண்டும். ஆனால் இப்போதெல்லாம் கடையின் வாசல் வழியாகச் சென்றால் கூட கோவிந்தசாமி குடும்பத்தாரைக் கண்டு கொள்வதில்லையாம் அவர்.

''நீங்க ஜெயில்ல போய் ஜெயப்பிரகாஷைப் பார்த்தீங்களா?'' என்று லட்சுமி அம்மாளை விசாரித்த போது, ''எங்க கண்ணு முடியுது. பணம் வேண்டாமா? என் பையன் தான் போய்ப் பார்த்துட்டு வருவான்'' என்று கூறினார்.

**வே**லூர் சிறைச்சாலையிலுள்ள எட்டாவது கொட்டடியில் தூக்குக் கயிறை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் ஜெயப்பிரகாஷ் எப்படியிருக்கிறான்? யாரிடமும் பேசுவது கிடையாதாம். ஒருமுறை ஒரு ஜெயில் அதிகாரி, ''ஏம்பா, நீ ஒண்ணும் பலசாலி போல் தெரியலியே! நீயா ஒன்பது பேரைக் கொலை செய்தாய்?'' என்ற போது ''ஸார், இதெல்லாம் என்கிட்டே பேசாதீங்க!'' என்று சொல்லிவிட்டுச் சென்றானாம். வார்டர்களிடம் சொல்லி வாரப் பத்திரிகைகளை வாங்கிப் படிக்கிறானாம். அவனைப் பார்க்க வரும் ஒரே விஸிட்டர் அவன் அப்பா தானாம்! அவனுடைய அப்பாவோடு இப்போது யாதவர் சங்கமும் (ஜெயப்பிரகாஷ் அந்தக் குலத்தைச் சேர்ந்தவன்) ஜெயப்பிரகாஷின் தூக்குத் தண்டனையை ஆயுள் தண்டனையாக்கும் முயற்சியை மேற்கொண்டிருக்கிறதாம்!

—ப்ரியன்.

படங்கள்: தாமு, ரவிசங்கர்.

# மௌனப் புயல்

13

அவர்கள் மூவரும் அவசரமாக அந்த நெரிசலான தெருக்களைக் கடக்கும்போதும் மன்மோஹன் ஸிங் தீவிர யோசனையில் இருப்பவன் போல் தெரிந்தான். நடுவில் ஒரு முறை தன் கடிகாரத்தைப் பார்த்து "இன்னும் இரண்டு மணி நேரம் இருக்கிறது" என்று அவனிடம் சொன்னான்.

பாட்டியாவின் பேச்சைக் கேட்டு இவன் இத்தனை கலங்கிப் போனதைக் கண்டு ரஞ்சனிக்கு வருத்தமாக இருந்தது.

"அவர் ஏதும் தப்பாகச் சொன்னதாக எனக்குத் தெரியலே மன்மோஹன்!"

"தப்பாகச் சொன்னதாக நான் சொல்லவில்லையே!" என்று மன்மோஹன் சிரித்தான்.

"பின்னே ஏன் அப்ஸெட் ஆகியிருக்கே?"

"ஆகல்லியே?"

"ஆகியிருக்கே! உன் சிநேகிதனை எனக்கு இன்னும் அறிமுகம் கூடப் படுத்தல்லே!"

"ஓ, ஸாரி. இவன்தான் ஷௌக்கின், சண்டிகர் பேப்பர் ஒண்ணுலே வேலையாயிருக்கான். நேரிலே பார்த்து ரிப்போர்ட் பண்ண இங்கே வந்திருக்கான்."

ஷௌக்கின் சின்ன உருவமாய் இருந்தான். அவளைப் பார்த்து மெலிதாகப் புன்னகை செய்து 'ஹலோ!' என்றான். கண்களைச் சுற்றி ஒரு கரு வட்டம் இருந்தது. ஒரு நிரந்தரச் சோகத்தைச் சுமக்கிறாற்போல.

இந்தச் சூழலில் சிரிப்பதே ஓர் அசம்பாவிதம் என்று அவளுக்குத் திடீரென்று தோன்றிற்று. இருபதுகளின் ஆரம்பத்திலேயே அறுபதுகளை எட்டி விட்ட மூப்பு தெரிந்தது.

ஷௌக்கின் தெருக்களை ஒரு நோட்டம் விட்டபடி சொன்னான்.

"நிச்சயமாக இப்ப அதிகமான ஜனங்கள் தெருக்களிலே காணப்படுகிறார்கள் மன்மோஹன்!"

"ஹிந்துக்கள், முக்கியமாக!" என்றான் மன்மோஹன்.

ஷௌக்கின் சீக்கியனா என்று தெரியவில்லை. தலைமுடி வெட்டப்பட்டிருந்தது. சின்ன தாடி ட்ரிம் செய்யப்பட்டிருந்தது.

"நீங்கள் ஹிந்துவா?" என்று அவள் தயங்கிக் கொண்டு கேட்டாள். "இந்த அநாகரீகக் கேள்விக்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்" என்றாள்.

ஷௌக்கின் பெரிதாகச் சிரித்தான்.

"நாகரீகம் என்பது என்ன? எனக்கு மறந்தே போச்சு! நீங்கள் தயக்கமில்லாமல் கேட்கலாம். உண்மையில் என்னை இதுவரை எல்லோரும் கேட்டிருக்கும் கேள்வி 'நீ ஒரு சீக்தானா?' என்கிற பழிக்கும் கேள்வி. இதே கேள்வி என் தங்கைப் புருஷனைக் கேட்டு பிந்திரன்வாலே அவனைத் தீர்த்தான். என் முறை வருவதற்குள் பிந்திரன்வாலே தீர்ந்து விட்டான்!"

அவள் குழப்பத்துடன் இருவரையும் பார்த்தாள்.

"இவனுடைய தங்கை புருஷன்தான் சுமீத் ஸிங். 'ப்ரீத் லடி' பத்திரிகை ஆசிரியன். பிந்திரன்வாலேயைக் கண்டித்துத் தலையங்கம் எழுதினதுக்காகச் சுட்டுக் கொல்லப்பட்டான், தெரியுமில்லையா?"

"தெரியும்" என்றாள் அவள் மெல்ல.

ஷௌக்கினின் கண்ணின் கரு வட்டத்துக்கு இதுதான் காரணம் என்று அவள் நினைத்துக் கொண்டாள். இவனது வீட்டு வாசலைச் சோகம் தாக்கியிருக்கிறது...

"என்ன கேட்டீர்கள்? ஆ, நான் ஹிந்து இல்லை... சீக்கும் இல்லை — யாரும் இல்லை. எந்த லேபிலோடும் நான் பிறக்கவில்லை. என் அம்மா நான் பிறந்ததும் என் நாமகரணத்துக்காக ஒரு குருத்வாராவுக்கு அழைத்துப் போனாளாம். அதற்கு நான் பொறுப்பில்லை. வேடிக்கையாயில்லை? நாம் யாருமே நடக்கும் பல அபத்தங்களுக்குக் காரணமாக இல்லாமலிருந்தும் எத்தனை கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கு? எத்தனை காயங்களை ஏற்க வேண்டியிருக்கு?"

"நான் உங்களை எந்தக் கேள்வியும் கேட்கவில்லை ஸாரி!" என்றாள் அவள் சிரித்துக் கொண்டு.

"ஷௌக்கின் ஒரு கவிஞன் கூட. நீ அவனிடம் மாட்டிக் கொண்டால் ஆபத்து!"

"அஹ்! பரிகாசம் செய்யாதே மன்மோஹன்!" என்று ஷௌக்கின் சிரித்தான். "என் வீட்டுக்கு வந்து பார், நீயும் கவிதை பாடுவே, இல்லையானால் பைத்தியம் பிடிச்சு அலைவே." இது ஏதோ அந்தரங்கப் பேச்சு என்று ரஞ்சனி பேசாமல் நடந்தாள்.

வாஸந்தி

தெருவில் செல்பவர்கள் எல்லாம் அவர்களை உற்றுப் பார்ப்பது போல் அவனுக்குத் தோன்றிற்று.

''ஒரு விஷயம் கவனித்தீர்களா?'' என்றான் ஷௌக்கின்.

''தெருவில் ஹிந்துவும் சீக்கும் தனித்தனி குழுவாக நடக்கிறார்கள். முன்பெல்லாம் இப்படி இருக்கவே இருக்காது. இரண்டு சீக் இருந்தால் அவர்களோடு ஒரு ஹிந்து நிச்சயம் இருப்பான். இப்பொழுது சுவர்கள் எழும்பிவிட்டன. அதைத் தாண்டிக் கையை நீட்ட எவனுக்கும் தைரியமில்லே! என் வீட்டுக்குள்ளேயே எழும்பி விட்டது மன்மோஹன்! போகிற போக்கைப் பார்த்தால் விவாகரத்தில் முடிந்தாலும் முடிந்து விடும்.''

மன்மோஹன் அவன் தோள்மேல் கையைப் போட்டான்.

''சுமான் 'யார்!' நீயும்சுமனும் ஒருத்தரையொருத்தர் புரிந்து கொண்டவர்கள். மதச் சார்பில்லாதவர்கள்.''

ஷௌக்கின் சிரித்தான். ''எதைச் சார்ந்திருக்கிறேன் என்றுபுரியல்லேமன்மோஹன். நான் பிந்திரன்வாலேயைக் கண்டிக்கிறேன். அரசின் நடப்புக்களை எதிர்க்கிறேன். ராணுவப் பிரவேசம் தவறானாலும் அதுதான் தர்க்க ரீதியான விளைவு என்கிறேன். இதெல்லாம் சுமனுக்கு முரண்பாடாய்ப் படுகிறது. எல்லாவற்றையும் கறுப்பு வெளுப்பாகப் பார்க்க அவள் ஆசைப்படுகிறாள். நான் மதச் சார்பில்லாதவன் தான். ஆனால்இனச் சார்பில்லாதவன் என்று சொல்ல முடியாது. சீக்கியர்களை அவள் தாக்கிப் பேசும் போது, அவள் ஹிந்து என்பதை என்னால் மறக்க முடியவில்லை. இஸ் இன்டிட் ஃபன்னி?''

''இட் இஸ்நாட்!'' என்றான் மன்மோஹன்.

''ஸாரி!'' என்றான் ஷௌக்கின், ரஞ்சனியைப் பார்த்து. ''ட்ராக்கை விட்டுப் போயிட்டோம். அரசியலே வேண்டாம் என்று கதவைச் சாத்திக் கொண்டு உட்கார்ந்திருந்த வீடுகளில் எல்லாம் ஜன்னல் வழியாக அரசியல் புகுந்து விட்டது, இங்கு யாருக்கும் தெரியாமல்!''

''கதவைத் திறந்து விடுங்கள்! தன்னால் போய் விடும்!'' என்றாள் ரஞ்சனி.

''ஏய், உன் சினேகிதி கவிதை பேசுகிறாள்!'' என்று ஷௌக்கின் சிரித்தான்.

மன்மோஹன் அவளைப் பார்த்த பார்வையில் ஒரு புதிய மென்மை தெரிந்தது. அது அவளுள் கிளப்பிய பிரவாகத்தில் அவள் மெலிதாகத் தடுமாறினாள்.

''குருசரன் ஸிங் வீட்டிற்குத்தானே போகிறோம்?'' என்றாள் அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு.

''ஆமாம்'' என்றான் மன்மோஹன். அவனுடைய முகத்தில் மறுபடி யோசனைக் கோடுகள் தெரிந்தன.

''நான் எதிர்பார்த்ததைவிட அதிகமாகக் குருசரன்ஸிங் கலங்கியிருக்கிறார்!'' என்றான் மெள்ள.

''ஏன்?'' என்றாள் அவள் யோசிக்காமல்.

''ஏனா?''

மன்மோஹனும் ஷௌக்கினும் தூரப் பார்வை பார்த்துச் சிரித்தார்கள்.

''ஸாரி, அது முட்டாள்தனமான கேள்வி'' என்று அவள் தனக்குள் சொல்லிக் கொள்வது போல் முணுமுணுத்தாள்.

அவர்கள் மூவரும் மௌனமாகச் சில சந்துக்களைக் கடந்து ஒரு வீட்டை அடைந்தார்கள்.

வீடு சர்வ நிசப்தமாக இருந்தது. வெயிலை மறைக்கக் கனத்த திரைச்சீலைகள் ஜன்னல்களை மூடியிருந்தன. கூலரின் ஓசையைத் தவிர வேறு சப்தமில்லை.

வீட்டில் நுழைந்ததும் ஸோபாவில் குருசரன் ஸிங்கின் நெடிய உருவம் படுத்திருப்பது



தெரிந்தது. கண்ணைக் கறுப்புத் துண்டினால் மறைத்திருந்தார்.

ஆளரவம் கேட்டுத் துண்டை விலக்கி அவர்களைப் பார்த்தார். ஓர் ஆயாசத்துடன் எழுந்து உட்கார்ந்தார்.

''இதுதான் ரஞ்சனி, குருசரன் ஜீ!'' என்றான் மன்மோஹன்.

''வா பேட்டீ! இங்கே உட்கார்!'' என்று அவர் தன் ஸோபாவைக் காண்பித்தார்.

''உங்களைப் பற்றி மன்மோஹன் நிறையச் சொல்லியிருக்கிறான்'' என்றபடி அவள் உட்கார்ந்தாள்.

''ஓ. அவன் சொல்வதை நம்பாதே. நான் ஒரு உதவாக்கரை ஆசாமி. பஞ்சாபின் நாசத்துக்கு ஸீல் அடித்து முடிந்து விட்டது. நான் இங்கே பேடியைப் போல முக்காடிட்டுக் கொண்டு ஜன்னல்திரைகளை மூடிக்கொண்டு படுத்திருக்கேன்!''

மூவரும் குறுக்கிடாமல் மௌனமாக அமர்ந்திருந்தார்கள், அவர் குரலில் இருந்த சோகத்தால் தாக்கப்பட்டவர்களாய்.

''எத்தனை பைத்தியக்காரன் நான்! என் நாடகங்களால் பஞ்சாபின் தலையெழுத்தை மாற்ற முடியும் என்று கனாக் கண்டேன்! அரசியல்வாதிகள் நாடகத்துக்கு முன் என்னுடையது எடுபடுமா? இத்தனை நாட்கள் ஜனங்கள் அரசியல் நாடகத்தை வேடிக்கை தான் பார்த்தார்கள். ராணுவப் பிரவேசத்



திற்குப் பின் இப்பொழுது என்ன ஆகப் போகிறது பார். வேடிக்கை பார்த்தவர்கள் மேடைக்கு ஏறிவிடுவார்கள். கொட்டகையை எரித்துவிடுவார்கள்!''

அவள் மௌனமாக இருப்பதைக் கண்டு அவர் பொதுவாக எல்லோரையும் பார்த்துச் சொன்னார்.

''என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லே, அரசு எப்படி இத்தனை பெரிய தப்பு செய்தது? சீக்கியர்களுடைய சைக்காலஜி அரசாங்கத்தின் உச்ச ஸ்தானத்தில் இருக்கும் சீக்கியர்களுக்குப் புரிந்திருக்க வேண்டாமா? அரசுக்கு உபதேசித்திருக்க வேண்டாமா? வேறு வழிகள் கிடைக்கவில்லையா ஒரு நச்சுப் பாம்பை விரட்ட?''

அவர் களைப்புடன் பெருமூச்சு விட்டார்.

''ராணுவப் பிரவேசம் ஒரு பெரிய தவறு என்று நான் சொன்னால் என்னை மத வெறியன் என்பார்கள். தேசத் துரோகி என்று கூறிவிடுவார்கள். உண்மையில் நான் தேசாபிமானத்தால் சொல்கிறேன் என்பது அவர்களுக்குப் புரியாது. இதன் விளைவுகள் எப்படியிருக்கும் என்று சீக்கியனான எனக்குத் தெரியும். வன்மை அதிகரிக்கும். துவேஷம் அதிகரிக்கும். ஹிந்து ஸிக் பிளவு நிரந்தரமாகிப் போகும். சீக்கியனுக்கு மூளை இயங்குமுன் ரத்தம் கொதிக்கும். அவனுடைய ரத்தம் அலாதியானதா என்று நீ சிரிப்பாய். அவனுடைய மரபுதான் அதற்குக் காரணம் மகளே! என்னைப் போல, மன்மோஹன் ஷௌக்கீனைப் போல் பட்சமில்லாமல் நினைப்பவர்களும் இருக்கிறோம்.''

மன்மோஹன் சிரித்தான். ''என்னுடன் ரஞ்சனியை அனுப்பவே அவளுடைய க்ரூப் தலைவருக்கு இஷ்டமிருக்கவில்லை. விலாசத்தைக் குறித்துக் கொண்டிருக்கிறார்.''

''அவருடைய சந்தேகம் புத்திசாலித்தனமானது!'' என்றான் ஷௌக்கீன். ''நான் தில்லியில் இருந்து எனக்கு அதிகாரமிருந்தால் என்ன செய்வேன் தெரியுமா? பிரதமரின், ஜனாதிபதியின் வீட்டிலோ அவர்களது நெருங்கிய வட்டத்திலோ சீக்கியர்களை வேலையில் வைத்திருக்க மாட்டேன்!''

ரஞ்சனி திடுக்கிட்டு அவனைப் பார்த்தாள். இவனும் ஒரு சீக்கியன் என்கிற நினைப்பு அவளது அடிவயிற்றில் ஒரு ஜில்லிப்பை ஏற்படுத்திற்று.

''இது கவலைப்பட வேண்டிய விஷயம் ரஞ்சனி. நான் கலவரப்படுத்தணும் என்கிற எண்ணத்தோடு இதைச் சொல்லல்லே'' என்றான் ஷௌக்கீன் மிருதுவாக.

''மதவெறி பிடித்துவிட்டால் யோசனைத்திறன் எங்கே இருக்கும்? முன்பு பொது ஜனங்களுக்கு இங்கே மதவெறி இருக்கல்லே. சீக்கிய இனத்துக்கும் மதத்துக்கும் ஹிந்துக்களாலே அபாயம்னு பிந்திரன்வாலே பிரசாரம் செய்த போது அவன் பேச்சை நம்பின கூட்டம் அதிகமில்லே. கோவிலே இப்ப இராணுவம் தாக்கினதும் கதை மாறிடுத்து. அதோட காரண காரியங்களை ஆராய மாட்டார்கள். தங்கள் இனத்தையே இராணுவம் தாக்கிட்டதாகத்தான் தோணும். அவர்களுக்கு ஏன் அப்படித் தோணணும்னு கேட்டியானால் அதுக்குப் பதில் கிடையாது.''

குருசரன் ஸிங் நிராசையுடன் கைகளை உயரத் தூக்கினார்.

''ஆ, இது பஞ்சாப் சோகம் மட்டுமில்லே மகளே! இது இந்தியச் சோகம்! இனிமேல் என்ன வேணும்னாலும் நடக்கலாம். எல்லைப் புறத்து மாநிலம் இது. பல அதிர்ச்சிகள் ஏற்படலாம்.''

அவர் சற்று நேரம் கற்பனை தந்த பீதியில் மௌனமாக இருந்தார்.

''எல்லாவற்றையும் விடப் பெரிய சோகம் என்ன தெரியுமா? இந்த நிலை ஏற்படாமல் தடுத்திருக்கலாம்!''

மன்மோஹன் ஸிங் எழுந்தான். ''ரஞ்சனியைக் கொண்டு விட்டு விட்டு வருகிறேன். இல்லாவிட்டால் ராணுவம் வந்துவிடும் அவளைத் தேட!''

''ஆமாம் கிளம்பு பேட்டி!'' என்றார் குருசரன் ஸிங். ''இந்தப் பேச்சுக்கு முடிவே யில்லே. தோற்றுப் போன ஆசாமி நான் பேசக் கூட வக்கில்லே.''

ஷௌக்கீனும் அவளுடன் மௌனமாக எழுந்து நிற்கையில் அவள் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினாள்.

ஹோட்டலின் வாசலில் பாட்டியா கவலையுடன் நிற்பதைப் பார்த்து,

''நீ போ, நான் உள்ளே வரவில்லே. தில்லியில் சந்திக்கலாம்'' என்று மன்மோஹன் சொன்னதும் அவனை வற்புறுத்தாமல் அவள் பாட்டியாவின் அருகில் சென்றாள்.

''எனக்கு ரொம்பக் கவலையாய்ப் போய் விட்டது'' என்றார் பாட்டியா. ''அந்த சீக்கியனோடு உன்னை அனுப்பியிருக்கக் கூடாது என்று யோசனையாய்ப் போய் விட்டது.''

''நான்தான் சொன்னேனே, அவன் என் சிநேகிதன் என்று?''

''இருக்கிற நிலையிலே யார் எப்படி மாறுவார்கள் என்று சொல்ல முடியாது. சீக் மட்டுமில்லே, ஹிந்துவும் கூடத்தான்!''

''நான் பிரதம மந்திரியாயிருந்தால்தான் நீங்கள் இவ்வளவு கவலைப்படவேண்டும்!'' என்று அவள் புன்னகை புரிந்தாள். தொடர்ந்து ஷௌக்கீன் சொன்னதை அவரிடம் தெரிவித்த போது பாட்டியாவின் முகத்தில் யோசனைக் கோடுகள் தெரிந்தன.

''வாஸ்தவம்'' என்றார் அவர் மெள்ள. ''ஆனால் பிரதமர் இந்த வாதங்களை ஏற்க மாட்டார். இதற்கெல்லாம் அப்பாற்பட்ட கொள்கைகள் கொண்டவர் அவர்!''

(தொடரும்)

குடும்பக்கட்டுப்பாடு அதிகாரி: ''நேற்று, உங்களுக்குப் பிறந்தது மூன்றாவது குழந்தைதானே? முற்றுப்புள்ளி வையுங்க..!''

அவர்: ''எனக்கு எழுதத் தெரியாது...! ''ரேகை''யின்னு வெக்கிறேன்...!''

—எஸ். என். மாடசாமி.



# "டைரக்டர் ஸ்ரீதர் இருக்காரா?"

## தென்றலே என்னைத் தொடு!

"குட்மார்னிங்... டைரக்டர் ஸ்ரீதர் இருக்காரா?"

"ஸ்ரீதர்தான் பேசறேன். நீங்க யாரு?"

"ஜெயமன்மதன். தென்றலே என்னைத் தொடு பத்திப் பேசலாம்னு..."

"போன மாசம் வந்த படத்தைப் பத்தி இப்பத்தான் பேசத் தோணுதா?"



"கொஞ்ச நாள் ஊர்ல இல்லே. உங்க படம் நிச்சயமா ஓடும். நிதானமாப் பாத்துக்கலாம்னு தள்ளிப் போட்டுட்டோம் ஹி... ஹி..."

"இண்டலா?"

"ஐயோ நெஜமாத்தான்."

"அதான பார்த்தேன் (கொஞ்சம் பெருமையாய்) ஸ்ரீதர் ஸ்ரீதர்தான்னு புரிஞ்சுக்கிட்டீங்களா?"

"பின்னே? சினிமாவுக்குக் கதை வேணுமோ வேணாமோ இளமை வேணும்னு நல்லாப் புரிஞ்சுக்கிட்டவராச்சே நீங்க. புதுசா ஒரு பொண்ணைப் பிடிச்சு கிளுகிளுன்னு காட்சிங்களை வச்சு தூள் பண்ணிட்டீங்க. அந்த ஜெயஸ்ரீயைப் பார்த்தா முதல் படம் மாதிரியே தெரியலே. லவ் ஸீன்லலாம் கூச்சமில்லாம நடிச்சிருக்காங்க. நீங்க கொடுத்த அரை குறை டிரஸ்லயும் அட்டகாசமா இருக்காங்க... ஹீரோவுக்கு புதுமுகம் யாரும் கெடைக்கலியா சார்?"

"எவ்வளவு ரிஸ்க் எடுக்க முடியும் நான்? கொஞ்சமாவது ஸ்டார் வால்யூ வேண்டாமா? ஏன், மோகனுக்கு என்ன கொறைச்சல்?"

"ஒரு குறைச்சலும் இல்ல. வழக்கம் போல வாழைப் பழம் மாதிரி வழவழ ரோல். கஷ்டமில்லாம செய்யறாரு. வேலை கிடைக்காதுன்னு நிச்சயம் பண்ணிக்கிட்டு மேனேஜர் ரூம்ல கத்தற கத்தலும், அப்புறம் விஷயம் தெரிஞ்சதும் சூப்பிரண்டெண்டெண்ட் தேங்காயிடம் கடன் வாங்கி கூத்தடிக்கறதும் ஜாலியாவே இருக்கு."

"கோபு என் கூட இருக்கறச்சே காமெடிக்கு என்ன கவலே?"

"அதுக்காக தேங்காயும், மகேந்திரனும் அடிக்கற லூட்டி கொஞ்சம் ஓவர்தான். ஸ்ரீதர் படத்திலயா இப்படி?"

"க்ளைமாக்ஸை அத்தனை பத்திரிகையும் பாராட்டியிருக்காங்களே. அது பத்தி ஒண்ணும் பேச மாட்டீங்களே?"

"அவசரப்படாதீங்க ஸ்ரீதர். கல்யாணத்தை நிறுத்த மோகன் வெ. ஆ. மூர்த்தியையும், தேங்காயையும் கூட்டிக்கிட்டு லாரில கௌம்பி தப்பான கல்யாணத்துக்கு போய் தர்ம அடி வாங்கற ஸீன்ல தியேட்டரே அதிருது... ஆனா அந்த க்ளைமாக்ஸை நம்பி நீங்க அஸ்திவாரத்தைப் பலமாப் போடாம விட்டது நியாயமில்லே."

"வாட் டூ யூ மீன்?"

"இதெல்லாம் ஸ்டைலா பேசுவீங்களே. கதை எங்கே டைரக்டர் சார்? மோகனும், ஜெயஸ்ரீயும் லவ் பண்ணுவாங்க. அப்புறம் ஜெயஸ்ரீ மோகனை சந்தேகிப்பாங்க. கோபிச்சுப்பாங்க. அப்புறம் மோகன் கோபிச்சுக்குவார். மறுபடியும் ஜெயஸ்ரீ ஊடல்ல எறங்கிடுவாங்க... இப்படியே கதை பண்ணிட்டீங்களே?"

"கதைதான பண்ணணும்?"

"அசோக் குமாரும், இளையராஜாவும் டபுள் என்ஜின் மாதிரி உங்க வண்டியை இழுத்திருக்காங்க. ஆறு பாட்டும் அருமையான பாட்டு. உங்க படம்னுலே இளையராஜா தனியா கவனிச்சுக்கறாரு. அசோக் குமார் காமிராவை வச்சுக்கிட்டு கவிதை எழுதறாரு. ஒரு சின்ன ரிக்வெஸ்ட் ஸ்ரீதர்."

"என்ன?"

"அடுத்த தடவையாவது கொஞ்சம் — நெறைய வேண்டாம் — கொஞ்சமே கொஞ்சம் கதையை வச்சுக்கிட்டு படம் ஆரம்பியுங்களேன்... ப்ளீஸ்..."

"லொடக்!"

## உன் கண்ணில் நீர் வழிந்தால்...

''ஹலோ, கலாகேந்திரா மூவீஸ்.''

''நமஸ்காரங்க. ஜெயமன்மதன்.''

''அட! சொல்லுங்க.''

''உங்க லேட்டஸ்ட் படம் பாத்தோம். என்ன இது. பாலு மகேந்திரா இப்படி உங்க காலே வாரி விட்டுட்டாரு?''

''இந்த சின்டு முடியற வேலே எல்லாம் வேணாம்.''

''காமிராமேன் பாலுமகேந்திராவுக்கு இருக்கற ஸின்னிய ரிட்டி ஒவ்வொரு ஃப்ரேம்லயும் தெரியுது. அப்பப்பா, என்ன அற்புதமா எடுத்திருக்காரு. அவரை நாங்க சொல்லலே. சொன்னது டைரக்டர் பாலு மகேந்திராவை.''

''அவர் டைரக்ஷன் சரியில்லேன்றீங்களா?''

''நீங்க இன்னும் 'உன் கண்ணில் நீர் வழிந்தால்' பார்க்கலியா?''

''வெளேயாடாதீங்க. படத்தை எடுத்ததே நாங்க தானே! (கவலேயுடன்) ஏன், படம் பிடிக்கலீங்களா?''

''மியூஸிக்கையும், காமிராவையும் விட்டா பிடிக்கும் படியா என்ன இருக்குங்க? 'நீங்கள் கேட்டவை'ன்னு ஏற்கெனவே மசாலா எடுத்து பாலு மகேந்திரா பயங்கரமா அசடு வழிஞ்சிட்டாரு. இப்பவும் நாங்க கேக்காத மசாலாவை எடுக்க ட்ரை பண்ணி எல்லாத்தையும் கெடுத்திட்டாரு. மசாலா படம்னு கதை இருக்கோ இல்லியோ, விடுவிடுன்னு நகரணும். இந்த படத்துல ஒவ்வொரு காட்சியையும் யானேயை வச்சில்ல தள்ள வேண்டியிருக்குது? போலீஸ் ஸ்டேஷன்லே செந்தாமரையும், வி.கே. ஆரும் வளவளன்னு என்னவோ வயலும் வாழ்வும் நிகழ்ச்சி மாதிரில்ல பேசிட்டே இருக்காங்க? ரஜினிகாந்தும் ஐயோ பாவம். பாதி நேரம் மாதவி கையைப் பிடிச்சுக்கிட்டு பச்சைப் பசேல்னு இருக்கற மலேலே நடந்துட்டே இருக்காரு. மிதி நேரம் பைக்ல டுர்ரு டுர்ருன்னு ரோந்து சுத்தறாரு.''

''என்ன சார் இப்படி சொல்லிட்டீங்க? ஏகப்பட்ட ஃபைட் வச்சிருக்கோமே?''

''என்ன ஃபைட் போங்க? அப்பப்ப வந்தா பரவால்லே. இவர்னு ஒரு ரீல்ல அஞ்சாறு ஃபைட்டு. அதுக்கு முன்னாலயும் ஒண்ணுமில்ல, அப்புறமும் சரியா இல்ல. சண்டைக் காட்சிலயாவது ஏதாவது புதுமை இருக்கா? ஊம்ஹூம். குலேபகாவலி படத்துல பாக்கற மாதிரி இருக்குது. ரஜினி ரசிகருங்களே போர் தாங்காம தியேட்டர்ல கூச்சல் போடறாங்க. தெரியுமா?''

''அதுக்காகத்தான் மாதவியைப் போட்டிருக்கோம்?''

''இன்னும் கெட்டது. என்னவோ தெரியலே, எப்பவுமே சோர்ந்து போன முகத்தோட படம் முழுக்க மாதவி வராங்க. காதல் ஸீன்லாம் சோகமா இருக்காங்க. உடம்பு கிடம்பு சரியில்லியோ, பாவம்? இதில சங்கீதா வேறே. போலீஸ்யுமன்னு இன்ட்ரட்யூஸ் ஆயிட்டு வி.கே. ஆரோட கனவு ஸீன்ல கண்டபடி கூத்தாடி கமலஹாசனேயும், சிவாஜியையும் கிண்டல் பண்ணியிருக்க வேண்டாம்.''

''ஐயையோ, யாரையும் கிண்டல் பண்ற ஐடியா இல்லீங்க.''

''பாதிப் படம் வரைக்கும் யார் ஹீரோ, ரஜினியா, வி. கே. ஆரான்னு ஒரு குழப்பம். வி. கே. ஆருக்கு எதுக்கு அநாவசிய காட்சிங்க? போதாததுக்கு ஒய். ஜி. மகேந்திரனுக்குப் புடவை கட்டி விபச்சார விடுதிக்கு அனுப்பி... நெக்ஸ்ட் ஸீன் என்னன்னு பிளான் பண்ணாம எடுத்துத் தள்ளியிருக்காரு டைரக்டர் பாலு மகேந்திரா. இவ்வளவு கற்பனே வறட்சியா?''

''கதை கொஞ்சம் வீக்குன்றீங்களாக்கும்?''

''வீக்காவது? மூச்சு பேச்சில்லாம இருக்குது கதை. டயலாக்ஸாம் இல்லாம, மனுஷங்களும் இல்லாம ஸைலன்ட்டா ஷூட்டிங்ஸ எடுத்திருந்தாக் கூட ஃபோட்டோகிராஃபிக்காக பதினாலு ரீலும் பாக்கலாம். பை!''

— ஜெயமன்மதன்



## ''கலாகேந்திரா ப்ளீஸ்...''



# நாற்பது வயசு ஒரு வயசா?

உமாகல்யாணி

குலுங்கி அழும்சுப்பையாவைக்காணப் பாவமாக இருந்தது.

பாவம், மனைவி மீது எத்தனை பிரியம் அவனுக்கு!

மனைவி இறந்து ஏழு நாட்கள் ஓடிவிட்டன. எனினும் இன்னமும் அவனது அழுகை நிற்க வில்லையே. நினைத்து கொண்டால் போதும் குலுங்கி குலுங்கி அழுகிறான்.

இறந்துபோன மனைவி அவளின் நினைவாக ஏதாவது குழந்தைகளை விட்டுவிட்டுப் போயிருந்தாலாவது ஓர் ஆறுதல் கிட்டியிருக்கும். இப்போது அதற்கும் இடமில்லை.

போனவள் சும்மாவே போய்விட்டாள்.

அவள் ஒன்றும் மலடி அல்ல.

இரண்டு குழந்தைகளைப் பெற்றவள்தான். ஆனால் அவை பிறந்ததுமே பயணப்பட்டுப் போய்விட்டதை எப்படித் தடுக்க இயலும்?

இப்போது பரந்த அப்பெரிய வீட்டில் அவன் மட்டுமே.

தனிமை!

எத்தகைய கொடுமை!

அதனால்தான் அவனுக்கு ஓர் ஏற்பாடு பண்ணலாம் என்கிற நோக்கமுடன், பெரியவர்களாக நான்கு பேர் கூடி வந்திருந்தனர். அவர்கள் இது குறித்துப் பேசத் துவங்கியதுமே இவன் அழத் துவங்கிவிட்டான்.

வந்தவர்களுக்கு மனத்தில் சங்கடம் உருவாகிவிட்டது.

எனினும் பிரச்னையை அணுகாமல் போய் விட அவர்கள் தயாராக இல்லை.

"கவலைப்படாதே சுப்பையா! ஊர் உலகிலே சாவுங்கறது சகஜம்தான். சிலபேரை அது ரொம்பவே பாதிச்சுடும். இப்ப உனக்கு அப்படி நேர்ந்துபோச்சு. அதுக்காக அடைச்ச கதவையே பார்த்துட்டிருந்தா எப்படி? மனசைத் தேத்திக்கப்பா" என்றார் பெரிய மாணிக்கம்.

"அதானே, பெரியவங்க சொல்றாங்கல்ல, கவலைப்படாதே. நீ அரும்பாடுபட்டுப் பார்த்தே. பணத்தைத் தண்ணீராய் ஓட விட்டே. கடவுள் மனசு வைக்கலியே...." என்றார் சிவசூர்யன்.

"பாளையங்கோட்டை ஹைகிரவுண்ட் ஆஸ்பத்திரியிலே மூணுமாசம் படுக்கையிலே கிடந்தா. நீயும் ஓடி ஓடிப் பார்த்தே. அவ ளானா... உன்னை விட்டுட்டுப் போய்ட்டா" என்றார் வேதம்.

"இனிமேல்உனக்கும்ஓர் ஆதரவுவேணும். வயசான காலத்திலே தவிச்ச வாய்க்குத் தண்ணீர் தரணும்னு உரிமைப்பட்டவளாய் ஒருத்தி இருந்தால்தான் அது முடியும். நீ என்ன சொல்கிறே?" என்று கேட்டார் சிவசூர்யன்.

"நாமெல்லாம் கூடி அவனுக்கு ஒரு நல்லது பண்ணப் புறப்பட்டிருக்கோம். வேணும்னு சொல்லப் போறான்.

"மனசு லேசிலே சம்மதம் தராதுதான். இருந்தாலும் உலகிலே வாழ்ந்தாகணுமே. நித்ய காரியங்கள் நடந்தாகணும். சுப்பையா, போனவளை நினைச்சுத் துக்கப்பட வேண்டியதுதான். அதுக்காக.... அதிலேயே மூழ்கி விடக் கூடாது. தனியே இருக்கிறதே பெரிய துக்கம். அதனாலே......" என்று முடிக்காமல் நிறுத்தி, அவனை ஏறிட்டார் வேதம்.

சுப்பையா மௌனமாக இருந்தான்.

"நாற்பது வயசு ஒரு வயசா? பேசாம இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டியதுதான். பின்னே, உம்ம சம்சாரம் உயிரோட இருந்தப்பவும் உமக்கு ஒரு சுகமும் தரலே. எப்பவும் நோய் நொடின்னு படுக்கைதான். இப்ப மகராசி போய்ட்டா. பேசாமல் சொன்னதைக் கேளும். இன்னொரு கல்யாணம் பண்ணிக் கொள்ளும்" என்றார் சிவசூர்யன்.

"அதெல்லாம் சம்மதிப்பான். என்னப்பா நான் சொல்றது. எங்களைப் பார்த்துப் பேசு" என்றார் பெரிய மாணிக்கம்.

"இப்ப அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம்" என்றான் முனகும் குரலில் சுப்பையா.

"அட சும்மா இருப்பா. இது ஒரு தப்

பிள்லே. நீ தயங்கவே வேணும்'' என்றார் வேதம்.

''போனவளோட காரியம் முடியுமுன்னே புதியவளுக்கு வரவேற்பான்னு யோசனே பண்ண வேண்டாம். அவளுக்குப் பண்ண வேண்டியதிலே குறைவைக்கப் போறதில்லே. சொல்லப்போனு, நீ ரெண்டாம் கல்யாணம் பண்ணப் போறதையே அவளும் விரும்புவா. ஆசீர்வதிப்பா!'' என்றார் சிவசூர்யன்.

''ஆமா.... ஆமா....'' என்றார் வேதம்.

''நாம ஒண்ணும் பெண் தேடி அலேய வேண்டாம். அவ படுக்கைன்னு ஆனதும், உதவி பண்றதுக்காக வந்த அவு தங்கச்சி பார்வதியையே பண்ணிக்கோ. உறவும் விட்டுப் போகாது. அந்த ஏழைக் குடும்பத் துக்கும் உதவின மாதிரி இருக்கும்'' என்று தீர்ப்பளிப்பது போல் முழங்கினர் பெரிய மாணிக்கம்.

''ஆமாம்.... ஆமாம்....'' என்றார் சிவ சூர்யன்.

ஒரு நிமிடம் மௌனமாய் ஓடிற்று.

''என்னப்பா இது. நாங்களானு உன்னைப் பற்றியே பேசிட்டிருக்கோம். நீயோ வாயே திறக்காம இருக்கியே. சம்மதம்னு வாய் திறந்து சொல்லு'' என்றார் பெரிய மாணிக் கம்.

''வாய் திறந்து சொல்லணுமா? இப்படி மௌனமாய் இருப்பதே சம்மதம்னு சொல்ற மாதிரிதானே'' என்றார் வேதம்.

''ஆமா.... ஆமா.... அது அப்படித்தான்'' என்றார் சிவசூர்யன்.

சுப்பையா எதுவோ அபிப்ராயம் கூற வாய் திறந்தான்.

''சுப்பையா, இப்ப நீ ஒண்ணும் அபிப் ராயம் சொல்ல வேண்டாம். மறுப்பாய் எதையும் சொல்லிடாதே. இவளோட 'பதி னறு' காரியம் ஆனதும், ஒரு நல்ல நாள் பார்த்து ஓசைப்படாம அவ கழுத்திலே தாலியைப் போட்டுடு.....'' என்று முடிவாகக் கூறிவிட்டார் பெரிய மாணிக்கம்.

இனிமேல் அப்பீல் கிடையாது.

அனைவரும் எழுந்து கொண்டனர்.

ஒரு பிரச்னே சுலபமாய் முடிந்ததில் சுப் பையாவிற்குத்தான் ஏகமாய்த் திருப்தி. கத வோரம் ஒதுங்கி நிற்கும் மைத்துனியின் பக்கம் கள்ளச் சிரிப்புடன் நெருங்கினன் சுப்பையா!

உலக மேடையில் இப்படிப்பட்ட துரோக நாடகங்கள் தாமே அடிக்கடி அரங்கேறு கின்றன.

இப்பவும் அப்படி ஒன்று.

## சாட்டையைத் தேடும் பம்பரங்கள்

இது 3-D சினிமாக்களின் காலம்; அதனுல் தானே என்னவோ, மேடையில் (ஸ்ரீப்ரியா வுக்கு) ஒரு த்ரீ-டைமன்ஷன் நாடகமாக வழங்கிவிட்டார் இயக்குநர் எம்.எஸ்.ராஜேந் திரன். ஸ்ரீப்ரியாவுக்காக — மன்னிக்கவும், விஷ்ணுப்ரியாவுக்காக ஸ்ரீகவி எழுதிய இந்த நாடகத்தில் மூன்று வெவ்வேறு பாத்திரங் களில் பம்பரமாகச் சுழன்று, சாட்டையைத் தேடுவதை விட, சாட்டையைச் சொடுக்கு கிறார் ஸ்ரீப்ரியா. விழுபவை: நிறைய அப் ளாஸ்கள்.



ராமாராவ், தயிர்வடை தேசிகன் இரண்டு பேருமே நாடகத்தின் சீரியஸ்னஸ்ஸைக் குறைக்க அவ்வப்போது சிரிப்பு வெடிகள் வைத்தாலும், முன்னவரின் பாத்திரம் நகைச் சுவைக்காகச் சற்று மிகைப்படுத்தப்பட்ட மாதிரி இருக்கிறது. அவரை மட்டும் குறை சொல்லிப் பயனில்லே. ஆங்கிலோ — இந் தியத் தமிழ் பேசிக் கொண்டு, அவருக்கு இரண்டாம் தாரமான சித்ரா பாத்திரத்தில் வரும் ஸ்ரீப்ரியாவுக்கும் இந்த மிகைச்சுவை யில் பங்கு உண்டு! ஆனல் கவுண்டரம்மா சின்னத்தாயியாகவும், ஐயங்கார் மாமி ஸ்ரீமதியாகவும் கச்சிதமாகவே செய்திருக் கிறார். வசன உச்சரிப்பில் துளி நெருடல் இல்லே.

ஆரம்பத்தில் கவுண்டரின் மகன் ஒருவன் இருப்பதாகச் சொல்லிவிட்டு, அப்புறம் அம்போ என்று விட்டு விடாமல், கடைசியில் அந்தப் பாத்திரத்தை இயல்பான திருப்பத் துக்கு உபயோகித்துக் கொண்ட நாடகாசிரி யருக்குத் தனியாக ஒரு சபாஷ் சொல்லி விடலாம்.

மூன்று வெவ்வேறு குடும்பங்களின் கதை. ஆனல் எதையும் அதிகம் வளர்த்தாமல் டக் டக்கென்று கத்தரித்து வழங்குவதில் இயக்கு நரின் சாமர்த்தியம் தெரிகிறது.

அண்ணுமலே மன்ற ரசிகர்களேயும் ஆர். ஆர். சபா ரசிகர்களேயும் ஒருங்கே திருப்திப் படுத்தும்விதத்தில்நாடகம்எழுதுவதுஎப்படி என்ற ரசாயனத்தை ஸ்ரீகவி புரிந்து கொண் டிருக்கிறார்.

—சாருகேசி.

# ஆகாச கங்கை

**26**

சாரதாவைத் திகில் கவ்வ ஆரம்பித்த போது இரவு மணி ஒன்பது. காலையில் வழக்கம்போல் ஸீனியர் அட்வகேட் கேஜிகே வீட்டுக்குச் சென்றவள் இன்னும் வீடு திரும்பவில்லை. காலையிலும், மாலையிலும் வசுமதி பெசண்ட் நகர் செல்லுவதும், மாயா-அரவிந்தனுடன் ஒரு சில மணி நேரங்கள் கழிப்பதும் அவள் அறிந்ததுதான். இருப்பினும் இரவு ஏழரையானால் வசு வீட்டுக்கு வந்துவிடுவாள்.

ஒன்பதே கால் மணிக்கு பால்கனிக்கு வந்தவள் ஒன்பதே முக்கால் வரை வைத்த கண் எடுக்காமல் தெருவிலேயே லயித்துப் போனாள். கார்களும் ஆட்டோக்களும் வந்தன. அரசு அளித்த சலுகை காரணமாக இரண்டு பேர்களைச் சுமந்த சைக்கிள் விளக்குகள் இல்லாமல் வந்தன. திமர் திடீரென்று சாரதா துள்ளுவாள். ஒரு பெண் உருவம் வரும். வசுமதிதான் என்ற நம்பிக்கை பிறக்கும். அருகே வரும்போதுதான் வசுமதி அல்ல என்ற உண்மை தெரியும்.

அவளுக்குக் கால் வலிக்கவில்லை. மனம் வலித்தது. வசுமதி ஏன் இப்படி திடீரென்று மாறிவிட்டாள்? அரவிந்தன் கிடைக்காமற் போன ஏமாற்றத்தை அவள் சமீப காலம் வரை காட்டவேயில்லை. மாயாவும் அரவிந்தனும் திருமணமாகிச் சென்னை வருவதற்கு முந்தின தினத்திலிருந்து அவள் ஒரு தனி உற்சாகத்துடன் இருந்தாள். அரவிந்தனுடைய வீட்டைச் சுத்தப்படுத்தி, பாத்திரங்களையெல்லாம் தேய்த்து, வீடெல்லாம் கோலம் போட்டு அவர்களை எதிர்கொண்டு அழைத்தாள். அதன்பின் தினசரி காலையிலும் மாலையிலும் அவர்கள் வீடே கதி என்றானாள். அப்படி இருந்தவள் ஏன் இப்படி மாறவேண்டும்? எது மாற்றியது? அவளுடைய பருவம் தாண்டி விடும் உணர்ச்சிகளா? உடல் விழையும் ஆசைகளா? காலம் நேரம் வரும்போது பசுவும், புலியும், பூனையும், நாயும் தங்கள் இச்சைகளைத் தெரிவிக்கின்றன. மனித வர்க்கத்தில்தான் எந்தப் பெண்ணும் தன் பருவப் பசியைத் தீர்த்துக் கொள்ள, பகிரங்கமாக ஓலமிடுவதில்லை. வசுமதி உள்ளூர ஓலமிடுகிறாளா?

சாரதா தன்னையே சபித்துக்கொண்டாள். அவளுக்குக் கிடைத்த இல்லற சுகத்தில் வேதனைகளாகக் குழந்தைகள் பிறந்தன. நான்கு பெண்கள். எல்லாம் வயதுக்கு வந்தவர்கள். வசுமதியின் வயதில் அவள் மூத்த இரண்டு பெண்களைப் பெற்றுவிட்டாள். ஆனால் முப்பதும் இருபத்தெட்டும், இருபத்து மூன்றுமாக மூன்று பெண்கள் இன்னும் மணவறைக்குள் பிரவேசிக்காமல் இருக்கிறார்கள். இதற்கு யார் காரணம்? தற்காலத்துப் பொருளாதார நிலைமை, வரதட்சணைப் பிரச்னை என்று அவள் தப்பித்துக் கொள்ளப் பார்க்கிறாள். அவளால் தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளத்தான் முடிந்தது. சீதா, கற்பகம், வசுமதி இவர்களுக்கெல்லாம் திருமணமாகவில்லை என்றால் அதற்குக் காரணம் அவளல்ல. இந்த உலகம். அது போகிற போக்கு. ஒரு காலத்தில் ஐந்து வயதுப் பெண்ணின் கழுத்தில் தாலி ஏறியது. பின் நாளடைவில் ஒன்பது, பத்து என்று ஏறி, பதினைந்தில் நின்றது. அதன்பின், பதினெட்டு, இருபது என்றாகியது. இப்போது? அவரவர் அதிர்ஷ்டத்தையும், பொருளாதார வசதியையும் பொறுத்துப் பெண்கள் மணமேடைக்கு வருகிறார்கள்.

சாரதாவுக்கு கண்கள் கனத்தன. இருப்பினும் தான் ஒரு தவறும் செய்யவில்லை என்று அவள் நம்பினாள்.

திடீரென்று கணவர் சதாசிவத்தின் குரல் கேட்டது.

"சாரதா...."

அவள் தெருவிலிருந்து கண் எடுக்காமலே, "உம்" என்றாள்.

"அந்தக் கழிசடைக்காக நீ கண் முழிக்காதே..... மணி பத்து அடிக்கப் போறது..."

"எங்கேயாவது பஸ்ஸிலேந்து விழுந்துட்டாளா.... இல்லே ஸ்கூட்டர், ஆட்டோ ஏதானும் அவ மேலே மோதிட்டதா....."

"பேத்தாம உள்ளே வா."

"நீங்க படுத்துக்குங்கோ."

"அது எனக்குத் தெரியும்!"

"எங்கே போயிருப்பா?"

"வந்ததும் கேளு!"

"ராத்திரி பூரா வரலேன்னா?"

"கார்த்தாலே போலீஸுக்குச் சொல்லுவோம். ரேடியோ டீ.வி.க்கெல்லாம் சொல்லுவோம். எதுக்கும் அவளோட ஒரு போட்டோவை எடுத்து வை. டீ.வி.க்காரனுக்குக் கொடுக்கணுமே...."

ஏ.வி.ஆர்.

''விளையாட்டா இருக்கு, உங்களுக்கு?'' என்றாள் சாரதா.

''வர்றவன் வழியிலே நிக்கமாட்டா....''

''நீங்க கார்த்தாலே அவகிட்ட அப்படிப் பேசியிருக்கப்படாது.... அதான் மனம் உடைஞ்சு இப்ப வராமயே போயிட்டா.''

''அப்படி என்ன பேசிட்டேன், சாரதா... கோபம் வந்தது. கத்தினேன்.''

''வெறும் சத்தமா? நீங்க பேசின வார்த்தைகளைக் கொஞ்சம் நெனைச்சுப் பாருங்கோ.'' என்றாள் சாரதா.

சதாசிவம் நினைத்துப் பார்த்தார்.

* * * * *

காலை.

ஆறேகால்.

வசுமதி கைப்பையுடன் புறப்பட்டாள்.

''வசு!'' என்று சதாசிவம் அழைத்தார்.

''என்ன அப்பா?''

''உன் போக்கு சரியில்லே.''

''ஆறேகால் மணிக்குப் போகிறபோக்கா?

மறுகணம் வசுவின் கன்னத்தில் 'பளார்' என்று விழுந்தது.

அவளுடைய கன்னம் வலித்தாலும் கண்ணில் நீர் சுரக்கவில்லை. பார்த்தாள். கையில் ஒரு கரண்டியுடன் அம்மா சமையலறை வாயிலில் நிற்க, சீதா சுவரில் சாய்ந்து அருகே இருந்த கற்பகத்தைப் பார்த்தாள்.

''என்னைக் கைநீட்டி அடிச்சுட்டேள்.''

''உன்னால இந்தக் குடும்ப மானமே போறது.... உன்னைக் கொலை பண்ணவும் தயங்க மாட்டேன்.''

''திரும்பி நான் அடிச்சா அதுவே கொலையில் முடிஞ்சுடும்.... பெரிசா ஆபீஸர் உத்யோகம் பார்த்தேன்! என்ன புண்ணியம்? வயசான பெண்ணை அடிக்கிற நாகரீகத்திலே தான் இன்னும் இருக்கேள்....''

''மூடு வாயை.

''நான் மூடறேன்.... இன்னிக்கு என் கன்னத்திலே விழுந்த அடி, அதோ என் அக்காக்கள் சீதா, கற்பகம் ரெண்டு பேர் கன்னங்களிலேயும் விழும். என்ன உரிமை இருக்கு உங்களுக்கு என்னை அடிக்க?''

''வேலை கெட்ட வேலையில் உன்னைப் பெத்துத் தொலைச்சாளே! அந்த உரிமை!''

''என்னைப் பெறணும்ங்கற ஆசையா உங்களுக்கும், அம்மாவுக்கும்.... உங்க பசி தாகத்திலே விளைஞ்ச எச்சல்தானே நாங்க எல்லாரும்!''

''பாருடி, சாரதா, உன் பெண் எப்படிப் பேசறா?'' என்றார் சதாசிவம்.

''உன் பெண் அப்படீன்னு சொல்லாதீங்க.... நம்ப பெண்ணுன்னு சொல்லுங்க... இல்லாமப் போனா என் அப்பா யார்னு நான் அம்மாவைக் கேட்கற நிலை வந்துடும்.''

''லாயர் பேசறா!'' என்றார் சதாசிவம். பிறகு, ''இனிமே நீ என் மூஞ்சியிலே முழிக்கக் கூடாது!'' என்றார்.

''அப்ப போற மானம் திரும்பிடுமா... உங்க மூஞ்சியிலே நான் முழிக்கப் படாதுன்னு எனக்கு ஓ. கே. ஆனா உங்களாலே



மாசம் தாங்க முடியுமா? உங்க பென்ஷன் பூராவையும் ஹவுஸிங் போர்ட்காரன் வாங்கிக்கறான். ஒரு மாசத்துக்கு ஒரு மூட்டை அரிசி.... ஒரு நாளைக்கு நாலு லிட்டர் பால். அதோ அவளுக்கும் அவளுக்கும் காலேஜ் செலவு. எந்த வீட்டுச் செலவை நீங்க ஏத்துக்கறீங்க? இதோ உங்க கையிலே இருக்கிற 'ஹிந்து' பேப்பருக்கும் நான்தான் கொடுக்கறேன்.... சீதா, கற்பகம் நான் மூணு பேரும் இங்கே இல்லேன்னா நீங்க தெருவுக்கு வந்துடுவீங்க. அப்பத்தான் உங்க மானம் போகும்.''

''சீ, நீ ஒரு பெண்ணா?''

''யார் சொன்னா.... நானும் பெண் இல்லே. சீதா, கற்பகமும் பெண்ணில்லே.... எல்லாம் மூத்து, முரைச்சு, நரைச்ச அம்மா வயசுப் பொம்மனாட்டிகள்.... பெத்த பெண்களைக் கரையேத்த வக்கில்லே.... பெரிசா அடக்க வந்துட்டார்!''

சதாசிவத்துக்கு உடம்பெல்லாம் பதறியது. கோபத்தில் நரம்புகள் நடுங்கின.

''தெரு நாய்க்குக் கூட விவஸ்தை இருக்கும்.... கார்த்தாலேயும் சாயங்காலமும் அந்தக் கம்மனாட்டி அரவிந்தனோட........''

''ஷட் அப்.... மைண்ட் யுவர் வோர்ட்ஸ்... இனியும் ஏதானும் பேசினீங்க, கொலை விழும்....''



வசுமதி கத்தியதில் எதிர் வீட்டு வாசற் கதவு திறந்தது.

''அப்பா,நீங்கநாக்கிலேநரம்பு இல்லாமப் பேசறீங்க....'' என்ருள் சாத்வீகத்துக்கு மறு பெயரான சீதா.

''பெண்கள் சம்பாதிக்கப் போட்டாத் தான் சாப்பிடலாம்னு இருக்கறவங்க அடங் கிப் போகணும்'' என்ருள் கற்பகம்.

''போதும் வசு.... நீ புறப்படு....''

''எண்ணி மூன்று நாள். அதற்கு அப்புறம் என் நிழலைக் கூட நீ பாக்கமாட்டே அம்மா!''

''அதை அப்புறம் பார்த்துக்கலாம்.... இப்ப நீ போ!''

வசுமதி மௌனமாக வெளியேறினுள்.

* * * * *

சதாசிவம் இன்னும் சிலையாக நின்ருர். ஏன் கோபம் அப்படித் தலைக்கேறி, பெற்ற பெண்ணை அப்படி நிந்திக்கத் தூண்டியது? ஏன் ஒரு நல்ல மனிதன் அரவிந்தனை அத், தகைய கீழ்நிலைக்கு அவர் தாழ்த்திஞர்?

''சாரதா....''

''உம்.''

''நெனைச்சுப் பார்த்தேண்டீ. நான் அப் படிப் பேசியிருக்கப்படாது....''

''வசுவும் சீதா, சுப்பு மாதிரித்தான்னு நீங்க தப்பா எடை போடறேள்.... வசு பொண்ணுதான். ஆறு பத்து ஆண் பிள்ளை களோட தைரியமும், திறமையும் அவளுக்கு உண்டு. கேஜிகே இவளை நம்பி டில்லிக்கும்

கல்கத்தாவுக்கும் அனுப்பறார்னு என்ன அர்த்தம்? மத்த ஆம்பிளை ஜூனியர்களை விட இவ ஒசத்தின்னுதானே?''

''நான் அவனுக்கு ஃபோன் பண்ணிப் பார்க்கட்டுமா.... மருந்துக் கடை இன்னும் திறந்திருக்கும்.''

''வேண்டாம்.''

''பொடி நடையா பெசண்ட் நகர் போய் அரவிந்தன் வீட்லே இருக்காளான்னு பார்க்கறேன்....''

''கூடாது'' என்றாள் சாரதா.

''பின்னே என்னதான் செய்யறது...?''

''என் பெத்தவயிறு அலறிண்டிருக்கட்டும். நீங்க போய்த் தூங்குங்கோ....''

சாரதா மீண்டும் தெருவில் கண்களைப் பதித்தாள்.

நீண்ட நேரத்திற்கு அவளுடைய கண்கள் குத்திட்டு நின்றன.

இரவும் முடியவில்லை.

வசுவும் வரவில்லை.

* * * * *

காலை எட்டு மணிக்கு வசு படியேறி வந்தாள். வந்தவள் யார் முகத்தையும் பார்க்க வில்லை. யாரிடமும் பேச்சுக் கொடுக்கவில்லை. இரு பெட்டிகளை எடுத்தாள். இரண்டும் அவள் பணம் கொடுத்து வாங்கியவை. ஒன்று ஒரு கட்சிக்காரர் சிங்கப்பூரிலிருந்து வாங்கி, மலிவு விலைக்கு அளித்திருந்தார். ஒரு வீட்டையே அதனுள் அடக்கிவிடலாம்.

பெட்டியில் புடவைகளை அடுக்கி வைத்துக் கொண்டிருக்கையில் சாரதா காபியுடன் வந்தாள்.

ஆனால் வசு லட்சியம் செய்யவில்லை.

''வசு, இந்தா காபி.''

''தேவையில்லே.''

''என்ன செய்யறே?''

''அரை மணி நேரத்திலே தெரியும்.''

''எங்கே போறே?''

''உங்களுக்குத் தெரியவேண்டிய அவசியம் இல்லே.''

''ஒரு அம்மாகிட்டே ஒரு பெண் பேசற விதமா இது?''

''சீ, உங்களுக்கெல்லாம் வெட்கமில்லே... என்ன உரிமையோட நீ உன்னை என் அம்மான்னு சொல்லிக்கறே...''

''அப்பா ஏதோ ஒரு கோபத்திலே சொல்லிட்டார்.... ராத்திரியெல்லாம் வருத்தப் பட்டார். தூங்கவேயில்லே....''

''இப்ப நான் யாரோடும் பேச விரும்பலே.''

''காலாகாலத்திலே உங்களுக்கெல்லாம் கலியாணம் பண்ணி வைச்சு, புருஷன் வீட்டுக்கு அனுப்பாதது பெரிய தப்புத்தான் வசு... எங்களை மன்னிச்சுடு....''

''ரெண்டு பேரும் சுவத்திலே முட்டிண்டு அழுது தீர்த்துக்குங்கோ. கலியாணம் பண்ணிக்காமலேயே நான் பிறந்த வீட்டை விட்டுப் போறதுன்னு ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன்....''



''எனக்குச் சொந்தமான ஆபீசில் பணிபுரிந்தவரையே மாப்பிள்ளையாக்கியது தப்பாப் போச்சு!''

''அதிலே என்ன தப்பு?''

''முதலிரவுக்கும் ஓ. டி. கேட்கிறார்!''

''வசு!'' — சாரதா.

வசுமதி பதில் சொல்லவில்லை.

சீதா, கற்பகம், தங்கை, தம்பி எல்லோரும் அவளைச் சூழ்ந்து கொண்டார்கள்.

யாரிடமும் அவள் பேசவில்லை.

பத்து மணிக்கு ஒரு கார் வந்தது. டிரைவர் மாடி ஏறி வந்து இரு பெட்டிகளையும் தூக்கிக் கொண்டு போனான்.

வசுமதி புறப்பட்டாள்.

வாசலைத் தாண்டுகையில் எல்லோர் காதிலும், குறிப்பாக சதாசிவம் காதில், படும் படியாக, ''செல்வம், பெட்டிகளை நான் சொன்ன இடத்தில் வைச்சு ரூமைப் பூட்டி சாவியை வைச்சுக்க... போற வழியில் என்னை பெசண்ட் நகரில் இறக்கிவிடு. அரவிந்தனுடைய வீடு உனக்குத் தெரியாது. நான் சொல்றேன்.'' என்றாள். பிறகு, ''பெரிய அக்கா, சின்ன அக்கா.... இப்பவே சொல்லிடறேன். நம்மைப் பெத்தவாளுக்கு இனி மேலும் நாம கடன்படணும்னு இல்லே.... நமக்கு வாழ்க்கையை இவங்க வகுத்துத் தராதபோது நாமாகவே நம்ப வாழ்க்கையைத் தேடிண்டு போறதுதான் சரியான வழி. என்னை மாதிரி உங்களுக்கும் தைரியம் இருந்தா, கூடிய சீக்கிரம் ஒரு விமன்ஸ் ஹாஸ்டலுக்குப் போய்ச் சேருங்கோ.... நான் வரேன்!'' என்றாள்.

மறுகணம் அவள் மாடிப்படியில் விரைந்தோடும் சத்தம்தான் கேட்டது.

பத்தரை மணிக்கு அரவிந்தன் வீட்டை அடைந்த அவள் அவனுடன் பேசும்போது வீட்டில் நடந்த பூகம்பத்தைப் பற்றிக் கூற வில்லை. ஏன் அப்படி ஒன்று நிகழ்ந்ததன் எதிரொலி கூட அவளுடைய குரலில் ஒலிக்க வில்லை.

அவள் அவனிடம் கேட்ட அந்தக் கேள்விக்குச் சிரிப்புடன் அரவிந்தன் கூறிய பதில் அவளை நடுங்க வைத்தது.

அரவிந்தன் உண்மையாகவே அந்த வழியைப் பின்பற்றலாம் என்கிறானா, அல்லது வேடிக்கை காட்டுகிறானா? வசுமதி பயந்து போனாள்.

(தொடரும்)


ஆபீஸில் இன்னொரு நாள் மூச்சு முட்டற வேலே...
... பஸ்ஸுலே வீடு திரும்பறப்போ விழிபிதுங்கற
கூட்டம். அப்பாடி! வீட்டுக்கு வந்தா அலுப்புத்தீர
குளியல், களைப்பினைப் போக்கி
புத்துணர்ச்சியூட்டும்தம்ளர் ஹார்லிக்ஸ்.
Horlicks
The Great Nourisher
சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

### சலித்துக் கொள்ளாமல் உதவி

தபால்நிலையம் இல்லாத எங்கள் அரும்பாகுளம் கிராமத்தில், பொது நலத்தில் அக்கறையுள்ள ஒருவர் தன் பணத்திலேயே தபால் உறைகள், தபால் தலைகள் ஆகியவற்றை வெளியூரிலிருந்து வாங்கி வந்து அரசு விலைக்கே எங்கள் கிராமத்தில் விற்று வருகிறார். அதோடு எழுத்தறிவில்லாதவர்களுக்கு எந்த நேரத்திலும் மனம் சலித்துக் கொள்ளாமல் கடிதம் எழுதித் தந்தும் உதவி வருகிறார். அவரை நினைத்து மகிழாமல் இருக்க முடியவில்லை.

அச்சுதமங்கலம். ப. கார்த்திகேயன்.

### எங்கள் வீட்டுத் திருமணம்

எங்கள் தெருவிலுள்ள எல்லா வீடுகளுக்கும் வலியச் சென்று உதவி செய்து கொண்டிருந்த ஓர் ஊமைப் பெண்ணுக்குப் பல வருடங்களாகத் திருமணமாகாமல் இருந்தது அனைவருக்கும் வேதனையாக இருந்தது. சென்ற மாதம் விடுமுறைக்காக வந்திருந்த அடுத்த தெருவைச் சேர்ந்த ராணுவ வீரர் ஒருவர் அந்தப் பெண்ணைத் திருமணம் செய்து அழைத்துச் சென்றுவிட்டார். அந்தத் திருமணத்தை எங்கள் ஒவ்வொரு வீட்டிலும் நடந்த நிகழ்ச்சிபோல் மகிழ்ந்து விமரிசையாக நடத்தி வைத்தோம்.

மதுரை — 7. ஆர். வாசுகி







### ஆண்டவன் முன் அனைவரும் சமம்.

ஆண்டுதோறும் எங்கள் ஊரிலுள்ள கிராமத் தேவதைக்கு விழா எடுப்பது வழக்கம். விழாவின்போது அம்மனைத் தேரில் வைத்துப் பவனி வரச் செய்வார்கள். அதேபோல் சென்ற ஆண்டுக்கு முந்தைய ஆண்டும் அம்மன் தேரில் பவனி வந்தபோது, ஹரிஜன மக்கள் தாங்களும் அம்மனுக்குப் படையலிட்டு வழிபட வேண்டும் என்றனர். அதற்கு உயர் ஜாதி இந்துக்கள் மறுப்புத் தெரிவிக்கவே வாய்ச் சண்டை வலுக்க ஆரம்பித்து ஒரு மிகப் பெரிய ஜாதிக் கலவரத்தைத் தூண்டிவிடும் நிலையே ஏற்பட்டுவிட்டது. அப்போது எங்களூர் முக்கிய பிரமுகர் ஒருவர் தலையிட்டு இறைவன் முன் அனைவரும் சமம் என்று இருதரப்பினரையும் சமாதானப்படுத்தி, ஹரிஜனங்களின் விருப்பத்தையும் நிறைவேற்றி அனைவரையும் மகிழ்வுறச் செய்த அந்த நிகழ்ச்சியை யாருமே மறக்க முடியாது!

அந்தநல்லூர். எம். ஜி. சேகர்.

நல்ல
கா

### சொன்னால் மட்டும் போதுமா?

'தமிழ் வாழ்க' என்ற வாசகத்தைத் தாங்கி நிற்கும் சென்னை மாநகராட்சி ரிப்பன் மாளிகையில் நான் 63ம் ஆண்டு பணியில் சேர்ந்தேன். அங்கு ஒருநாள் கூட தமிழ் இலக்கியக் கூட்டம் நடைபெறவேயில்லை. இப்போது புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் மாநகராட்சி அலுவலர்கள் சங்கத்தின் புதிய செயலாளர்களான வி. சிவராமகிருஷ்ணன், ந. பாலசுந்தரம் ஆகியோரின் பெரு முயற்சியால் கடந்த 16.4.85 அன்று தமிழ்ப் புத்தாண்டு விழா என்ற பெயரில் ஓர் இலக்கியக் கூட்டம் நடந்தது. எனது நீண்ட நாள் மனக்குறையும் நீங்கியது. அனைவரும் மகிழ்ந்தோம்.

சென்னை—39. சி.தெ. பாலசுப்பிரமணியன்.

## இதென்ன காட்டுமிராண்டிப் பயிற்சி?

1944 — 45 வேலூர் போலீஸ் பயிற்சிக் கல்லூரியில் பயிற்சி பெற்று வந்த சப் — இன்ஸ்பெக்டர்களை, ஸ்டேலி என்ற சார் ஜண்ட் அங்குள்ள கரடு முரடான உயர்ந்த கோட்டையின் உச்சி மீது ஏறிச் சுற்றி வந்து ஒரு குறிப்பிட்ட இடத்தில் கீழே குதிக்கச் செய்தபின்னரே மற்ற பயிற்சிகளைச் செய்யச் சொல்லுவார். இதில் இரண்டு பேருடைய கால்கள் முறிந்து மூன்று மாத காலம் சிகிச்சை பெற வேண்டியதாயிற்று. அப்போது முதல்வராக இருந்த ராஜாஜி அவர்கள் அங்கு விஜயம் செய்தார். அந்தப் பயிற்சியைக் கண்ட அவர், 'இதென்ன காட்டுமிராண்டிப் பயிற்சி?' என்று அந்தப் பயிற்சியை ரத்து செய்யச் செய்தார். அனைவரும் சந்தோஷத்தில் குதிக்க ஆரம்பித்துவிட்டோம்!

கல்லக்குடி. துபாஷ் அப்துல் ரசாக்.





# ...யம் நடந்தது

## முடியாததை முடித்தோம்!

எங்களூரில் ஒரு பூங்கா அமைப்பதற்காகச் சுமார் நான்கைந்து வருடங்கள் முயற்சி செய்தும் முடியவில்லை. அதனால் படித்த இளைஞர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து பஞ்சாயத்து யூனியனுக்குச் சென்று கேட்ட போது, இடம் வேண்டுமானால் தருகிறோம். பூங்கா அமைப்பதற்கான நிதி வசதி யூனியனில் இல்லை' என்று சொல்லிவிட்டார்கள். எனவே பொதுமக்களிடம் நிதி திரட்டி நாங்களே பூங்காவை அமைத்து முடித்தோம். அந்தப் பூங்காவும் இப்போது அற்புதமாக இருக்கிறது.

மதுக்கூர். ஜி. கலைமணி.

## பெண்களுக்காக ஒரு கல்லூரி!

எங்களூரில் பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளை மதுரை, திருச்சி என்று கல்லூரிகளுக்கு அனுப்ப வேண்டிய சூழ்நிலை. பெண்களுக்கும் அதே நிலைதான். அதனால் பல பெண்களால் படிக்க முடியவில்லை. இந்த நிலையில் எஸ். ஜி. ஜெயராஜ் நாடார் அவர்களின் புதல்வர்கள் பெண்களுக்கென்றே 'ஜெயராஜ் அன்னபாக்கியம் கல்லூரி' என்ற பெயரில் ஒரு கல்லூரியை நிறுவினர். அதனால் பெரியகுளம், மற்றும் பக்கத்துக் கிராமங்களிலுள்ள பெண்கள் அனைவரும் கல்லூரிப் படிப்புக்குச் செல்ல ஆரம்பித்தனர். இது தான் எங்களுக்கேற்பட்ட மிகப் பெரிய மகிழ்ச்சி.

பெரியகுளம், டி. என். கிருஷ்ணமூர்த்தி.

## பதைத்த மனத்துக்குப் பக்தி

மாயவரத்துக்கு அருகில் — காவிரிக் கரையின் ஓரத்தில் அமைந்துள்ள ஒரு சிறிய கிராமம் எனது கிராமம். அதில் பெரிய கோயில் எனப்படும் சிவன் கோயில் பழுதடைந்த நிலையிலேயே நீண்ட காலம் இருந்தது; காணும்போதெல்லாம் மனம் பதைத்துத் துடித்தது. இப்போது காஞ்சி முனிவரின் ஆசியோடு அது புதுப்பிக்கப்பட்டுப் பூஜை

கள் நடந்து வருவதைப் பார்க்கும்போது மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்கிறது மனம்.

புதுடெல்லி, வி. வெங்கடராமன்.

**களங்கம் நீக்கிய அதிகாரி**

எங்கள் சேலத்தில் தடுக்கி விழுந்தால், விலை மாதர் விடுதியில்தான் விழ வேண்டும் என்ற நிலை இருந்தபோது, 'இதற்கு என்று தான் விடிவு காலம் பிறக்குமோ' என்று அனைவரும் கவலைப்பட்டுக் கொண்டிருந்தோம். அந்த வேளையில்தான் விஜயகுமார் என்பவர் எங்கள் மாவட்டத்தின் காவல் துறை அதிகாரியாகப் பதவி ஏற்றார். தீவிர முயற்சி எடுத்து இரண்டே மாதங்களில் விபச்சார விடுதிகளை ஒழித்துக் கட்டினார். எங்கள் அனைவரின் உள்ளங்களும் குளிர்ந்தன. அவரைப் பாராட்டாத நெஞ்சமே இல்லை.

சேலம்—1, கே. எஸ். வேலுச்சாமி.

**நாங்களே சீரமைத்தோம்**

எங்கள் பெருங்குளத்தூரில் இருபதாண்டு காலமாகச் சாலை வசதி மோசமானதாகவே தான் இருந்து வந்தது. நூற்றுக் கணக்கான மனுக்களைக் கொடுத்ததுதான் மிச்சம். யாரும் கவனிக்கவில்லை. அதனால் ஊர்க்காரர்களான நாங்களே ஒன்று சேர்ந்து சாலையைச் சீரமைத்தோம். வேலை முடிந்தபோது ஏற்பட்ட எங்கள் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. அதை நினைக்கும்போது இன்றும் எங்களுக்கு மகிழ்ச்சிதான்.

சென்னை—41, டி. என். முகுந்த்.

**புதுமைப் பெண்!**

நான் வழக்கமாக அலுவலகம் செல்லும் பஸ்ஸில் பெண்களைக் கேலி செய்வதற்கென்றே மூன்று ரவுடிகள் வருவார்கள். அவர்களைத் தட்டிக் கேட்க ஒருவருமில்லையே என்று ஒவ்வொரு நாளும் ஆதங்கப்படுவேன். ஒருமுறை அவர்கள் ஒரு பெண்ணைக் கேலி செய்தபோது, அந்தப் பெண் அவர்களைத் தன் செருப்பால் அடிக்க, மறுநாளிலிருந்து அந்த ரவுடிகளைக் காணவேயில்லை. தைரியமுள்ள அந்தப்பெண்ணை நான் பாராட்டாத நாளே இல்லை.

சென்னை—7, கே.எஸ். ருக்மிணி அம்மாள்.



**தலைவர் போட்டியும் இளைஞர்களும்**

1975—ஆம் ஆண்டு முதல் எங்கள் இளைஞர் மன்றத்தினர் ஒன்று சேர்ந்து யார் வீட்டில் விசேஷம் நடந்தாலும் தண்ணீர் எடுத்தல், பந்தி பரிமாறுதல் போன்ற வேலைகளைச் செய்து வந்தனர். இடையில் ஏற்பட்ட தலைவர் போட்டிச் சச்சரவு காரணமாகச் சில ஆண்டுகள் அவர்களுக்குள் ஒற்றுமையில்லாமல் இருந்தனர். அது மிகப்பெரிய குறையாகவே இருந்தது. பிறகு புதிதாகக் குடி வந்த குடும்பத்தைச் சேர்ந்த விஸ்வேஸ்வரன் என்ற இளைஞர் மீண்டும் இளைஞர்களிடையில் ஒற்றுமையை ஏற்படுத்திப் பழைய நிலையைக் கொண்டு வந்துவிட்டார். அவர்களின் ஒற்றுமை கண்டு இப்போது ஊரே மகிழ்கிறது.

தேக்கூர், என். கிருஷ்ணமூர்த்தி.

**நான் தைரியமாகச் சாவேன்!**

கல்லூரியில் படித்தபோது என்.எஸ்.எஸ். சார்பாக திருவடைக்கழி என்ற கிராமத்தில் பதினைந்து நாட்கள் முகாம் சென்றிருந்தோம். அங்குள்ள சுடுகாட்டிற்குப் பிணங்களைக் கொண்டு செல்லப் பாதையே இல்லாமல் இருந்தது. அதனால் மக்கள் பெரிதும் அவதிப்பட்டனர். அரசு எதுவுமே செய்யவில்லை. அதனால் நாங்களே ஒரு சாலையைப் போட்டு முடித்தோம். அப்போது ஒரு வயதான மூதாட்டி, 'இனிமேல் நான் தைரியமாகச் சாவேன். என்னை யாரும் சிரமமில்லாமல் சுடுகாட்டிற்குக் கொண்டு செல்லுவார்கள்....!'' என்று சொன்னபோது எங்கள் கண்கள் கலங்கிவிட்டன.

புதுடெல்லி, இரா. சி. துரை.



'புளோ பிளாஸ்ட்' வழங்கும் வி. ஐ. பி. ஸூட்கேஸைக் குலுக்கல் முறையில் பரிசாகப்* பெறும் அதிர்ஷ்டசாலி:

ஆர். வாசுகி,
10, மூன்றாவது சந்து
2 வது தெரு,
இ. எம். ஜி. நகர், கோ. புதூர்,
மதுரை — 7.

# ஒரு மகனின் முதல் வழக்கு!

அன்றையத் தபாலில், ராகவேந்திரனுக்கு வழக்கறிஞராகப் பணியாற்ற ஸன்னது கிடைத்து விட்டது. இனி அவன் தனியாக எந்த வழக்கையும் எடுத்து வாதாடலாம்.

அவனுடைய ஸீனியர் சாய்நாத் அவனைப் பெரிதும் ஊக்குவித்தார். அவருடைய வழக்கு ஒன்றில் அவன் காட்டிய ஆர்வமும் ஒத்துழைப்புமே வெற்றிக்கு வழி காட்டியது. ''இதேபோல் தொடர்ந்து நீ ஒவ்வொரு வழக்கிலும் அக்கறை காட்டினால் நிச்சயம் நல்ல பேரும் புகழும் கிடைக்கும்'' எனப் பாராட்டினார்.

சிறு வயதிலிருந்தே அவனுக்கு வக்கீல் தொழில் மீது ஆசை. பெர்ரி மேஸன் நாவல்களை விரும்பிப் படிப்பவன். அடுத்த வீட்டுக்குச் சட்ட சம்பந்தமான புஸ்தகங்கள், பத்திரிகைகள் வரும். அவற்றை எடுத்துக் கொண்டு போய் ஊன்றிப் படித்து விட்டுத் தருவான்.

அந்தப்பக்கத்துவீட்டுவக்கீல்கூட அவனைப் பரிகசிப்பார். ''நான் இந்தப் பத்திரிகையை மேலோட்டமாகப் பார்த்துவிட்டுப் போட்டு விடுகிறேன். நீ ஒருவன்தான் கடைசி வரை சுணங்காமல் படிக்கிறாய்!'' என்று.



ப்ளஸ் டூ தேர்வில் அவன் முதலாவதாக வந்தபோது அவன் தாயார் அவனை டாக்டருக்குப் படிக்கச் சொன்னாள். மாமா இன்ஜினீரிங் கல்லூரிக்கு விண்ணப்பிக்கச் சொன்னார். ஆனால் அவன் பி. ஏ. (பொருளாதாரம்) விரும்பிப் படித்தான். பின்னர் சட்டக்கல்லூரி.

எல்லா வகுப்புகளிலும் அவன்தான் முதல். சட்டக் கல்லூரியில் விசேஷப் பேருரை ஆற்ற வந்திருந்த சாய்நாத் தானாக விரும்பி அவனைத்தம் ஜூனியராக ஏற்றுக் கொண்டார். அவர் பல கம்பெனிகளுக்குச் சட்ட ஆலோசகர். அவர் மட்டும் நினைத்திருந்து — ராகவேந்திரனும் விரும்பியிருந்தால் — ஏதாவது ஒரு நிறுவனத்தில் — நாலு இலக்கச் சம்பளத்தில் அவனை உட்கார்த்தி வைத்திருக்க முடியும்.

ஆனால் அவன் விரும்பியதோ — தனியாக வக்கீல் தொழில் செய்வதையே! மாதம் இரண்டு மூன்று வழக்குகள் வந்தால் கூடப் போதுமானது. தன் சாமர்த்தியத்தால் — தன் வாதத் திறமையால் — தன் கட்சிக்காரருக்கு வெற்றி வாங்கித் தரும் அந்தப் பெருமிதம் போதும்.

சாய்நாத் அவனை ஆசீர்வதித்து அனுப்பினார். அவனுடைய சிறிய வீட்டு வாசலின் முகப்பில் கே. ராகவேந்திரன், பி. ஏ. பி. எல். — அட்வொகேட் எனப் பெயர்ப் பலகை மாட்டப்பட்டது. தான் எடுத்துக் கொள்ளும் முதல் வழக்கின் வருமானத்தை அப்படியே தன் தாயின் காலடிகளில் வைத்து நமஸ்கரிக்க வேண்டும்.

அம்மா இல்லாமல் யாரும் இல்லைதான்! இருந்தாலும் எவளும் அவனைப் பெற்றவளுக்கு ஈடாகுமா? அவனைப் பொறுத்த வரையில் அவள்தான் எல்லாம். கருணைப் பெட்டகம்; அன்புச் சுரங்கம்; தெய்வம் கூட அடுத்த படிதான்! தான் பிறந்த ஒரு மாதத்திற்கெல்லாம் தன்னையும் தன் தாயையும் உதறிவிட்டு எவள் பின்னாலோ ஓடிப் போன தன் தந்தையைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறான். படத்தில் பார்த்திருக்கிறான்; நேரில் பார்த்ததில்லை. தாலி கட்டியவளுக்கும் பெற்ற பிள்ளைக்கும் ஒரு ரூபாய் ஜீவனாம்சம் கூடத் தரவில்லை. அதைப் பெற்றுத் தரத் தகுந்த மனோபலமும் பண வசதியும் அவர்களிடம் அப்போது இல்லை.

இந்த முதல் வழக்கு சாயிநாத்திடம் அவனாகக் கேட்டுப் பெற்றச் சந்தர்ப்பம்; அவர் கூட எச்சரித்துப் பார்த்தார். இந்த வழக்கில் வெற்றிக்கு வாய்ப்பு அதிகம் இல்லை என்று. ராகவேந்திரன் தீர்மானமாகக் கேட்டுப் பெற்றுக் கொண்டான்.

வழக்கின் விவரம் இதுதான். ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் ஒரு தொழிற்சாலையை நிறுவ ஒப்புக்கொண்டிருந்தார் அவன் கட்சிக்காரர். அதற்குத் தேவையான எல்லா யந்திரங்களும், அதன் பாகங்களும் பல இடங்களிலிருந்து தருவிக்க ஏற்பாடு செய்தார்கள். ஒரு முக்கியமான பாகத்தை ஒரு சிறு கம்பெனி செய்து தர ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தது. ஆனால் குறிப்பிட்ட தேதிக்கு மேலாகியும் தரவில்லை. முன்கூட்டியே தன் இயலாமையைத் தெரிவிக்காமல் இருந்துவிட்டதால் மாற்று ஏற்பாடு செய்ய இயலவில்லை. அவன் கட்சிக்காரரால் குறிப்பிட்ட தேதியில் தொழிற்சாலையைத் தொடங்க இயலவில்லை. மூலதனம் போட்டவர்கள் வட்டிக்காக நெருக்க அவன் கட்சிக்காரர் பல இலட்சங்களை இழக்க நேரிட்டது. அதற்குக் காரணம் அந்தச் சிறு கம்பெனியின் மெத்தனம் எனக் குற்றம் சாட்டி நஷ்ட ஈடு கேட்டு வழக்குத் தொடர்ந்து விட்டார்.

அந்தக் கம்பெனி சிறியதே தவிர பல நாட்களாக இயங்கிய நிறுவனம். நகரிலேயே பிரபலமான ஒரு வக்கீல் — இந்த மாதிரியான ஒப்பந்த மீறல்களில் வெற்றிகரமாக வாதாடுபவராகத் தேர்ந்தெடுத்து நியமித்திருந்தது.



சாய்நாத் வழக்கைத் தொடாமல் ராகவேந்திரனிடம் தள்ளி விடவும் அவர்களுக்கு ரொம்பவும் சந்தோஷம்.

இந்தக் கற்றுக்குட்டி வக்கீல் என்ன பிரமாதமாகச் சாதித்து விடப் போகிறார் என்று நினைத்தார்கள் — அந்தப் பெரிய வக்கீல் உள்பட.

கோர்ட்டில் நுழைந்த ராகவேந்திரன் தயக்கமாகத் தான் தன் வழக்கைத் தொடங்கினான். ஆனால் கூண்டில் நின்ற பிரதிவாதிகளைத் தன் கேள்விகளால் மடக்கி மடக்கிப் புரட்டிப் புரட்டி எடுத்தான். அவர்கள் கொடுத்த சாட்சியத்தையே திசை திருப்பி அவர்களைக் குற்றத்தை ஒப்புக் கொள்ளச் செய்தான்.

பிரதிவாதியின் வக்கீல் அசந்து போனார். இந்தச் சின்ன வயதில் என்ன சாமர்த்தியம்! அப்பப்பா! எத்தனை மேற்கோள்கள்! எத்தனை உதாரணங்கள்! நீதிபதி தன் தீர்ப்பிலேயே ராகவேந்திரன் எடுத்துக் கொண்ட சிரத்தையையும் உழைப்பையும் பாராட்டினார்.

இன்னொரு கோர்ட்டில் வாதாடிக் கொண்டிருந்த சாய்நாத் நேரில் வந்து பாராட்டிப் போனார்.

தீர்ப்பு ராகவேந்திரன் பக்கம்... அந்தக் கம்பெனி நஷ்ட ஈடாக ஐந்து லட்சம் தர வேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது.

அவனுடைய கட்சிக்காரர் பசையுள்ளவர். வழக்குப் போட்டதே ஒரு கௌரவப் பிரச்னையாகத்தானே தவிர பணத்திற்காக அல்ல. கோர்ட்டிலேயே ஒரு லட்சரூபாய்க்குச் செக் எழுதி ராகவேந்திரனிடம் கொடுத்தார்.

ராகவேந்திரன் வாங்கிக் கொண்டான்... நேராகத் தன் வீடு திரும்பினான். தன் தாயின் பாதங்களில் வைத்து நமஸ்கரித்தான்.

''நன்றாக இருடா குழந்தை!'' என வாழ்த்தினாள் அவன் தாய் கண்களில் நீர் மல்க. அவனை ஆளாக்க அவள் பட்ட சிரமம் அவள் அல்லவா அறிவாள்?

அவன் எழுந்தான். ''இந்த லட்ச ரூபாய் என் வழக்கின் வெற்றிக்குக் கிடைத்த சன்மானம் மட்டும் இல்லை, அம்மா! உன் ஜீவனாம்சம் அம்மா! கோர்ட்டில் நான் ஜெயித்த கம்பெனியின் முதலாளி வேறு யாரும் இல்லை. உன் கணவர்... நான் வெறுக்கும் என் தந்தை மிஸ்டர் எஸ். கிருபாகரன் பி. ஈ...''

அந்த வழக்கை அத்தனை தீவிரத்துடன் அவன் எடுத்துக் கொண்ட காரணம் அப்போதுதான் அவளுக்குப் புரிந்தது.

## அருள் வாக்கு

ஜீவர்கள் என்று நாம் இருக்கிறோம். நாம் வாழ்க்கை நடத்துகிற ஜகத் என்று ஒன்று இருக்கிறது. இரண்டையும் உண்டாக்கி, நடத்திக் கொண்டிருக்கிற ஈச்வரன் என்று ஒருத்தன் இருக்கிறான். 'ஜீவ — ஜகத் — ஈசுவரன்' என்கிற இந்த மூன்றும் என்ன? இந்த ஜகத் வியாபாரத்தில் ஜீவன் இன்பத்துக்கும் துன்பத்துக்குமிடையே ஊசலாடிக் கொண்டிருப்பது போல் இல்லாமல், இவன் சாச்வதமான இன்பத்திலேயே இருக்க வேண்டுமானால் அதற்கு என்ன செய்ய வேண்டும்?' என்று ஆராய்ந்து அநுபவ ரீதியில் பதில் சொல்வது தான் உபநிஷத்துக்கள் எல்லாவற்றுக்கும் பொதுவான லக்ஷியம். இவை முடிவாகச் சொல்வது என்ன?



பிரம்மம் என்கிற ஒரு பரம்பொருள்தான் ஜீவன், ஜகத் இரண்டுக்கும் காரணம். அந்தக் காரணமும் அதன் விளைவான ஜீவ — ஜகத்துக்களும் வேறு வேறு இல்லை. ஏனென்றால் பிரம்மத்துக்கு வேறாக எதுவுமே இருக்க முடியாது. இப்போது ஜகத்தையே நிஜம் என்று நினைக்கிற ஜீவாத்மா, அதை ஒதுக்கி விட்டு, தன்னையே யார் என்று விசாரம் பண்ணிப் பார்த்துக் கொண்டால் 'உடம்பு நானில்லை, இந்திரியங்கள் நானில்லை, மனஸ் நானில்லை, புத்தி நானில்லை, பிராணன் நானில்லை' என்று ஒவ்வொன்றும் கழன்று போய், கடைசியில் தான் பிரம்மமே என்று அறிந்து கொள்வான். 'பரமாத்மா என்று ஒன்று ஜீவாத்மாவைப் படைத்தது என்று சொல்வது கூட ஒரு மாயைதான். ஜகத்தெல்லாம் அந்த மாயையின் விளையாட்டுதான். வாஸ்தவத்தில் பரமாத்மா ஜீவாத்மா பேதமில்லாமல் ஆத்மா என்ற ஒன்றுதான் இருக்கிறது. 'அந்த ஒன்றே ஸத்தியம்' என்று தெரிந்து கொள்கிறான். அப்படி ஸத்தியத்தோடு இரண்டற (அத்வைதமாக) இருக்கிற போதுதான் சுக — துக்க ஊசலாட்டம் போய் ஒரே சாச்வத இன்பமாக, சாந்தியாக ஆகிறது. அதுதான் மோக்ஷம்.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

# ஏனய்யா ஜோக்ஸுக்குப் பஞ்சமா?



குட்டவும் தெரிகிறது உமக்கு!

* நாடெங்கும் ஜாதிக் கலவரங்கள் பெருகி விட்ட இன்றையச் சூழ்நிலையில் அப்துல் சமது அவர்களின் பேச்சு அனைவரையும் பெருமைப்படவைக்கிறது ஆலயங்கள் நசிந்து வருவதைத் தடுக்கும் வகையில் அமைச்சர் வீரப்பன் சட்டம் இயற்ற வழி செய்வது மகிழ்ச்சியான ஒன்று. கடவுளுக்கே வரம் தந்த அமைச்சர் வாழ்த்துக்குரியவர்தான்!

எஸ். சம்பத்குமார், சென்னை—93.

* பெண்ணுரிமைப் பிரச்னையில் வீரப்பனை மாட்டி விட்ட நீங்கள் தலையங்கத்தில் ஓஹோ எனப் பாராட்டித் தட்டிக் கொடுக்கவும் தெரியும், தேவையானால் குட்டவும் தெரியும் என நிரூபித்து விட்டீர்கள்.

எஸ். லட்சுமி, சென்னை—61.

கட்டுத் தள்ளு!

* செந்தமிழ்ச் செல்வியின் கண்ணீர்க் கதையைப் படித்ததும் எனக்குள் எழுந்த ஒரே கருத்து வரதட்சிணைக் கேட்போரைக் கண்டவுடனேயே சுட வேண்டும் என்பதுதான். படித்த பெண்களுக்கே இந்தக் கதி என்றால் படிக்காத எத்தனை பாமரப் பெண்கள் பரிதவிக்கிறார்களோ ... யாருக்குத் தெரியும்?

ரம்யா, கோவை—16.

உஷாரானோம்

* ஆம்னி பஸ் அவதிகளை அறிமுகப்படுத்தியதற்கு நன்றி. நாங்கள் இப்போது உஷாராகி விட்டோம்.

த. அருள்சிவபாலன், செங்கல்பட்டு—1.

சபாஷ் ஜெயகாந்தன்!

* தனது தனித்துவம் மிக்க படைப்புக்களினால் தமிழ் சிறுகதை உலகில் திருமூலராகப் போற்றப்படும் மணிக்கொடிக் கால மௌனியைப் பற்றிய அறிமுகம் என் போன்ற இளைஞர்களுக்கு ஒரு வரப் பிரசாதம். ஜெயகாந்தனுக்கு ஒரு சபாஷ்.

பா. கிருஷ்ணதாஸ், கும்பகோணம்.

குறைந்தா போய் விடுவீர்?

* 'ரம்ஜான் வாழ்த்துக்கள்!' என்று கல்கி வாசக முஸ்லிம் அன்பர்களுக்குச் சொல்லியிருந்தால் என்ன குறைந்தா போய்விடுவீர்கள்!

மேஜர்தாசன், ஈரோடு—10.

* ஏனய்யா ஜோக்ஸ்களுக்குப் பஞ்சமா? கல்கியில் ஒரு ஜோக் கூட வரவில்லையே!

எஸ். மஞ்சுளா, திருச்சி—14.

---

## வட்டமேஜை

கல்கிக்குப் பாராட்டு!

* மனத்தில் தேக்கி வைத்துள்ள பொருள் பொதிந்த விஷயங்களை எப்படி — யாரிடம் சொல்வது என்று வழிவகை தெரியாமல் விழித்துக் கொண்டிருந்த வாசகர்களுக்கு 'ஹைட்பார்க் பேச்சு' ஒரு நல்ல வாய்ப்பினை உருவாக்கித் தந்திருக்கிறது.

பி. எல். பரமசிவம், மதுரை—1.

* 'நரசம்மாவை அப்புறம் பார்த்துக்கலாம்' சிறுகதை எப்படிப்பட்டதொரு கொடுமையான மனிதனுக்கும் உள்ளே ஒரு நல்ல இதயம் இருக்கும் என்பதை எடுத்துக் காட்டியது.

எம். எட்வர்ட் ராஜப்பா, சென்னை—81.

* இரண்டாண்டுகளுக்கு முன்பு யூனிசெப்ஃபிடம் லட்சக்கணக்கில் பண உதவி பெற்று மன்னார்குடி நகராட்சி கழிவு-நீர் வடிகால் திட்டத்தை நிறைவேற்றியது. வீதிகளிலுள்ள வீடுகளை ஒட்டிக் கால்வாய்கள் அமைக்கப்பட்டன. அவை சரியான முறையில் அமைக்கப்படாததாலும், அவற்றில் சேரும் குப்பைகளை அவ்வப்போது அகற்றாததாலும் வீட்டிற்கு முன்புறம் தண்ணீர் தேங்கிப் பாசி படர்ந்ததால் கொசு ஏராளமாக உற்பத்தியாகிவிட்டது. தவளை முதலிய பிராணிகளும் அவற்றில் இறந்து கிடப்பதால் அந்தத் துர்நாற்றம் வேறு! உபத்திரவம் தாங்காமல் சென்ற ஆண்டு மழைக் காலத்தில் அவரவர் வீட்டு வாசலில் அவரவர்களே மண்ணை வெட்டிப்போட்டுத் தூர்த்துவிட்டார்கள். இப்போது அவற்றை மறுபடியும் நகராட்சியினர் தோண்டி எடுத்து வருகின்றனர். வரியை வாங்கிக் கொண்டு மக்களை இப்படி உபத்திரவத்துக்குள்ளாக்க ஒரு நகராட்சி; அதற்குப் பல்லட்சம் உதவித்தொகை வேறு! இதற்கெல்லாம் விமோசனமே கிடையாதா?

ஸரஸ்வதி ஜெயராமன், மன்னார்குடி.

(கடைசி கடிதம் பரிசு பெறுகிறது)

# எனக்கு வரப்போறவ அழகா இருக்கணும்

மாலை நேரக் களைப்புடன் அறைக் கதவைத் திறந்தேன்.

கதவின் இடைவெளி வழியாக உள்ளே செலுத்தபட்டிருந்த கவர் கீழே கிடந்தது.

எடுத்தேன்.

உறையின் மேலிருந்த மங்கல அச்சு அழைப்பிதழின் தன்மையை உணர்த்தியது.

பிரித்தேன்.

மணவிழா அழைப்புத்தான்!

பாபு — விஜயா.

'வாட் எ ப்ளெஸண்ட் ஸர்ப்ரைஸ்.'

அதிர்ந்தேன்.

பாபுவுக்குக் கல்யாணம்... பாபிலோனியா தோட்டம் போல், ஆக்ரா, தாஜ்மஹால் போல் சந்தேகத்துக்கிடமில்லாமல் இதுவும் ஒரு அதிசயம்.

பாபு வசதியானவன். கை நிறையச் சம்பளம். பிரச்னை இல்லாத வாழ்க்கைக்காரன். முன்னும் பின்னும் சகோதரிகள் அற்றவன். கல்யாணம் செய்து கொள்ள முழுத் தகுதி பெற்றவன். பல அழகிகளின் படங்களை வைத்துத் தனக்கு வரவேண்டியவளைப் பற்றிப் பல கனவுகளைக் கண்டவன்!

ஆனால்—

இன்னும் அவன் மணம் செய்து கொள்ளவில்லை.

நானும் செக்ஷன் நண்பர்களும் சம்சார சாகரத்தில் மூழ்கி, வாரத்துக்கு ஒரு ஷேவ் அடித்து, ரேஷன் க்யூவில் பாமாயில் வாங்கி, கெரஸினுக்கு இரவல் கார்டு வாங்கி... பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ—

அவன் மட்டும் ட்ரிம்மாக ட்ரெஸ் செய்து, மழுங்க க்ஷவரம் செய்து, நாளுக்கொரு சினிமாப் பார்த்து, இம்பாலாவிலும் பிலாவிலும் சாப்பிட்டு அனுபவிக்க —

நாங்களெல்லாம் அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவதென்று ஏகமனதாகத் தீர்மானித்தோம்.

அதிர்ஷ்டவசமாக எங்கள் அலுவலகத்து ப்ளாக்கின் விமலா அவன் ஜாதிக்காரியாக இருந்தாள்.

நிதானமாகத் திட்டம் போட்டு, தனித் தனியாகத் திட்டத்தை நிறைவேற்ற முடிவு செய்தோம்.

அவனோடு தனியாகப் பேசக் கிடைத்த வாய்ப்புகளில் எல்லாம் விமலாவின் அழகை விரசமில்லாமல் வர்ணித்தோம். மிகவும் தற்செயலாக அவளும் அவன் ஜாதி என்றோம்.

நிறைய மூளைச் சலவைகள் செய்தோம்.

பலன் — அவன் ஆதர்ஸ மனைவியின் புற, அக பரிமாணங்களை நாங்கள் புரிந்து கொண்டதுதான்!

''விமலா சரியான கறுப்புடா! இவ்வளவு நாள் காத்திருந்தது இவளைக் கட்டவா?''

''கறுப்பா இருந்தாலும் அம்சம்டா.''

''அப்போ நீ பண்ணிக்கோ.''

''மடையா, எனக்குஏற்கெனவே கல்யாணமாயிடுச்சி.''

''சரி, அப்போ சும்மா இரு. கல்யாணம் பண்ணிக்கிறது வாழ்க்கையில ஒரு தடவை. அதில விழுந்தா அப்புறம் தேற முடியாது. எனக்கு வரப் போறவ... நல்ல கலரா, அழகா, கொஞ்சம் வசதியான இடத்துப் பெண்ணாக இருக்கணும்.''

இவ்வளவு கண்டிஷன் போடுவதற்குப் பாபுவுக்கு நிச்சயம் தகுதி இருக்கிறது.

அவன் கை நிறைந்த கணவன்.

ஆறு மாதத்துக்கு முன்னால்தான் இங்கிருந்து மதுரைக்கு மாற்றலாகிப் போனான்.

போன புதிதில் ஒழுங்காகக் கடிதம் எழுதி, பிறகு மறந்து போனான்.

இப்பொழுது இன்விடேஷன் வந்திருக்கிறது.

பயலோட செலக்ஷன் நிச்சயம் அருமையாய்த்தான் இருக்கும்.

போய்ப் பார்க்க வேண்டும்.

* * * * *

கல்யாண வீடு — மோனையோடு சொல்ல வேண்டுமென்றால் — களை கட்டியிருந்தது.

பாபு மணமேடையிலிருந்து என்னைப் பார்த்து விட்டு, எம்பினான்.

பரவாயில்லே, அங்கேயே உட்கார் — என்று கையமர்த்தினேன்.

காப்பி குடித்து—

டிபன் மறுத்து —

நாற்காலியில் சாய்ந்து ஆசுவாசமான போது—

மணப்பெண்ணை அழைத்து வந்தார்கள்.

விசிலடிக்கலாம்.

அவ்வளவு அழகு!

சின்னப் பெண்.

மேடையில் அமர்ந்தாள்.

சும்மா சொல்லக் கூடாது. பொறுமைக்கும் தேடலுக்கும் எக்கச்சக்கமாய்ப் பலன் இருக்கிறது.

சந்தோஷப்பட்டேன்.

அட்சதை வாங்கிக் கொண்டு காத்திருந்தேன்.

மங்கல நாண் பூட்டினான்.

கெட்டிமேளப் பின்னணியில் அட்சதை தூவி விட்டுச் சந்தோஷமாக நாற்காலியில் சாய்ந்து கொண்டேன்.

அவன், அவள் கையைப் பற்றிக்கொண்டு தோழன், தோழி துணையுடன் மேடையைச் சுற்றி வந்தான்.

கையிலிருக்கும் பரிசைக் கொடுத்துவிட்டு, பஸ்ஸைப்-பிடிக்க ஓட வேண்டுமே என்ற யோசனையில் ஆழ்ந்தேன். என்றாலும்—

கட்டாயத்தைத் தவிர்க்க முடியாமல் சாப்பிட்டு முடித்தேன்.

தாம்பூலம் தரித்துக் கொண்டேன்.

''பின் பக்கம் பாத்ரூம் போகலாமில்லே?''

''ம்'' என்றவர் கைகாட்டினார்.

சந்தடிகளைத் தாண்டி நடந்தபோது அந்தக் குரல்கள் காதில் விழுந்தன.

''மீனாட்சி, ஒரு வழியா உன் பொறுப்பு முடிஞ்சிது இனிமேல் நீ நிம்மதியா இருக்கலாம்.''

''ம்... அப்படி நினைச்சித்தான் இந்தக் கல்யாணத்துக்குப் பணத்தை வாரி இறைச்சோம். ஆனா விஜயாவுக்கு இதில திருப்தியில்லையே!''

''ஏன் அப்படி? மாப்பிள்ளைக்கு என்ன குறைச்சல்?''

''இதையேதான் நானும் கேட்டேன். அதுக்கு அவ 'அவர் கை நிறைய சம்பாதிக்கலாம். வசதியான குடும்பமா இருக்கலாம். ஆனா எனக்கு நிகரான அழகா இருக்க வேண்டாமா? இப்பவே தலையில பாதி முடி கொட்டிடுச்சி. இன்னும் ஒண்ணு, ரெண்டு வருஷமானா தலைமொத்தம்காலியா இருக்கும். என்னை இப்படித் தள்ளி விட்டுட்டீங்களேன்னு அழறா.

நூத்துக்கு நூறு பொருத்தமாக எந்தக் கல்யாணம்தான் அமைஞ்சிடுது? இதெல்லாம் போகப் போகச் சரியாயிடும்!'

நான் அவர்கள் என்னைப் பார்த்து விடுவதற்குள் நகரத் துவங்கினேன்.

பெண்ணுக்கு மட்டும் ஆசையும் கனவுகளும் இல்லாமல் போகுமா? அப்போது தான் யோசிக்கத்தொடங்கினேன்.

எஸ். குமார்



## 38

### சிந்து விம்மினாள்!

ஆர்க்காட்டு முற்றுகை நாற்பது தினத்தை எட்டியிருந்தது அன்று. ராபர்ட் கிளைவ் மதில் மேலிருந்து கீழே நோக்கினார். வெளிப்புறத்தில் இருந்த ராஜா சாஹிப் படையினர் இடையே பெரிய இயக்கம் இருந்தது. கிளைவ் தமது டெலஸ்கோப்பைப் பொருத்திப் பார்த்தார். நூற்றுக் கணக்கில் ஏணிகளும், கயிற்றுப் பொச்சங்களும், கடப்பாறை மண்வெட்டிகளும் இதர தளவாடங்களும் வந்து கொண்டிருந்தன. ஜன சமுத்திரமாகப் படை திறந்த வெளியில் எள்ளைச் சிதறியது போல் கிடந்தார்கள்.

பரிசத்தின் மேல் இருந்த இந்திய ஹவில்தார் கிளைவ்வை கலக்கத்தோடு பார்த்தான்.

அவன் கண்களில் தாபம் இருப்பதைப் பார்த்து, கிளைவ் அவனை நோக்கிப் போனான்.

ஸல்யூட் அடித்து விறைப்பாக நிற்க முயன்றான் ஹவில்தார்.

"என்ன விஷயம்? பயப்படுகிறாயா?" என்றான் கிளைவ் புன்னகையோடு.

"துரை!" என்றார் ஹவில்தார். "தங்கள் சமூகத்திற்கு வந்தபிறகு பயம் என்ற வார்த்தை மறந்து போயிற்று. எனக்கு ஏற்பட்டிருப்பது அதை விடக் கொடிது" என்றார்.

"என்ன அது?"

"பசி!"

சொன்னவன் அரை நொடி கூட நிற்கவில்லை. விர்ரென்று பாய்ந்து கோட்டைக்கு வெளியே குதித்தான்.

கிளைவ் நெஞ்சம் ஒரு கணம் பதறியது. கோட்டைக் கீழே தரையில் அவன் சின்னாபின்னம் ஆகி இருப்பான் என்று தெரியும். இருந்தும் கோபம் வந்தது. தன் படையின் கட்டுப்பாட்டைச் சீர்குலைத்து விட்டானே! கிளைவ் உட்பட அவர் படையினர் அரைப் பட்டினி முக்கால் பட்டினிகளில் இருந்தார்கள். அதை வெளிக் காட்டிக் கொள்ளாமல், முகத்தில் அரைப் புன்னகையாவது காட்டி வந்தார்கள். எனினும் இது எத்தனை நாள் கொண்டு செல்லும் என்று கவலைப்பட்டிருந்தார். குறிப்பாக அவருக்கு இந்தியச் சிப்பாய்களிடம் பயம். அவர்கள் இதுவரை ஒழுங்கை அறியாதவர்கள். மேனாட்டு ஒழுங்கை இப்போதுதான் அனுசரிக்க வந்திருக்கிறார்கள். அதன் கஷ்டங்கள் என்ன என்று அவருக்குத் தெரியும். எனவேதான் கவலை கொண்டிருந்தார். அதற்கு இணங்க, முதல் தற்கொலை நடந்து விட்டது. இதைப் பின்பற்றி மற்றவர்களும் தற்கொலை செய்தால்...

கீழே எதிரி சைனியத்தார் அந்தப் பட்டினிச் சாவைக் கண்டு கூக்குரல் இடுவது கேட்டது. கிளைவ் உள்ளே இறங்கி உடனே தமது தளபதிமார்களை வரவழைத்தான். இந்தியர்களின் ஒழுக்கத்தைக் காப்பாற்ற வேண்டுமானால் அவர்கள் மேலும் தியாகம் செய்ய வேண்டும். முக்கால் பட்டினியை ஏற்றுக் கொள்ள வேண்டும். கால் பங்கிட்டைத் தான் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றான்.

தளபதிகள், உபதளபதி எல்லோரும் கப்சிப் என்று இருந்தார்கள்.

வில்லியம்ஸன் என்பவன் மட்டும் எழுந்து, "மிஸ்டர் கிளைவ்! இதன் முடிவு என்ன?" என்றான்.

"அநேகமாக இறக்க நேரிடலாம். ஆங்கிலேய இனத்திற்காக, நமது தேசத்திற்காக இதைச் செய்யலாம்."

திரும்பவும் இறுக்கமான அமைதி.

நீல்சன் என்பவன் எழுந்தான். "அதை ஏற்கெனவே உணர்ந்திருக்கிறோம். அதற்காக ஏதும் செய்யாமல் இருக்கப் போகிறோமா?" என்றான்.

"நான் தயார்! வெளியில் போய்ச் சண்டை போட்டு விடுதலை அடைய! நீங்கள் தயாரா?" கிளைவ் திரும்பக் கேட்டான்.

திரும்பவும் நிசப்தம்.

கிளைவ் தொடர்ந்தான். "அதே நேரம் நான் பொறுப்பற்றவனாகவும் இருக்க விரும்பவில்லை. அதையும் சொல்லி விடுகிறேன்."

"நல்லது. நாம் வெளியே போய் சண்டையிட்டு விடுதலை பெறுவது கடினம். எல்லோரும் பட்டினியாக இருக்கிறோம். நமக்கு வலு போதாது" என்றான் ஒரு உப தளபதி.

"ஒரு மாதம் ஓடி இரண்டாவது மாதம் நடக்கிறதே! இதுவரை உதவி வரவில்லையே!" என்றான் இன்னொருவன்.

"எல்லோருக்கும் செய்தி அனுப்பிவிட்டேன். உங்களுக்குத் தெரியும்" என்றான் கிளைவ்.

"நமது சகாக்கள் நம்மைக் கைவிட்டு விட்டார்களா?" என்றான் ஒரு தலைவன்.

"நிச்சயம் செய்ய மாட்டார்கள். ஆனால் எது செய்வதற்கும் இயலாதவர்களாக இருப்பார்கள்," என்றான் கிளைவ்.

வெகுண்டு எழுந்தான் ஒருவன். "ஏன் அப்படி இருக்கிறார்கள்! நாம் பட்டினியாய் இறப்பதை அவர்கள் அறியவில்லையா?"

# மோகினி தீக்கோலம்

"அறிந்திருப்பார்கள்!"

"அறிந்து சும்மா இருக்கிறார்களா துரோகிகள்."

கிளைவ் இடைமறித்தான். "பதற்றப்படாதே! அவர்கள்தான் நமக்குப் பொருளுக்கு வழி செய்தார்களே!"

"என்ன பொருள்?"

"திருப்பதிப் பணம்!"

"அதுதான் வரவில்லையே!"

"அதுதான் கஷ்டம்! அந்தப் பணம் வர வேண்டும் என்று ஒரு பணயத்தைப் பறித்து வந்தோம். அதுவும் நம் கைவசம் கிடைக்கவில்லை! தப்பித்து பிரெஞ்சுக்காரர் கைக்குப் போய்விட்டது."

"பணமும் வராது. படையும் வராது! என்ன செய்யப் போகிறோம்."

கிளைவ் உக்கிரமாக எழுந்தான்.

"இந்த நிலையில்-இந்தக் கோட்டைக்குள் இருந்து இதைப் பாதுகாக்கிறோமே, இது பெரிய சாகசம் இல்லையா? வீரம் இல்லையா? சகிப்பு இல்லையா? பெரிய ராஜதந்திரம் இல்



லையா?" கேள்விகளை மெள்ள மெள்ள உச்சமாக்கி நரம்பு தெறிக்கும்படி கடைசிக் கேள்வியைக் கேட்டான் கிளைவ்.

இரண்டு பேர் கையைத் தட்டினார்கள். தயங்கி இருந்தவர்கள் உடனே சேர, ஒரு பெரிய கரகோஷம் அங்கே எழுந்தது.

"என் தோழர்களே! இங்கே தியாகத்தோடு உள்ளே விடாப்பிடியாக அமர்ந்திருக்கிறோமே, அதுவே பெரிய சாகசம்! நாம் இங்கே ஒவ்வொரு கணமும் பட்டினி கிடக்




சும்மா லப
லபன்னு கத்தா
தேய்யா! எல்
லாம் ராக
மாலிகா பட்டு
சேலைன்னு
தெரிஞ்சுதான்
இந்த ஐடியா
பண்ணினேன்!
UMA FEATURES

கும்-பிடிவாதம் இருக்கிறதே. இதுதான் இங்கிலீஷ்காரர்களின் தளராத நெஞ்சத்துக்கு ஒரு சிறந்த உதாரணம். சகோதரர்களே! நீங்கள் வேண்டுமானாலும் பாருங்கள்! இங்கே சில நூறு பேர் இருந்து கொண்டு செய்யும் இந்த விடாப்பிடி செயல், நமது நாட்டின் பெருமையையும் புகழையும் உயர்த்தப் போகிறது! இது உறுதி!''

கரகோஷம் வலுத்தது.

அன்று மாலையில் மீண்டும் ராஜா சாஹிப்பிடம் இருந்து ஒரு கடிதம் வந்தது. 'உடனே கிளைவ் பணிய வேண்டும். இல்லாவிடில் கோட்டையை உடைத்து உள்ளே இருக்கும் அத்தனை பேரையும் கொன்று விடுவோம்.'

''தூ! நாங்கள் சாகத் தயார்! போய்ச் சொல்லுங்கள்'' என்று வந்த தூதுவரிடம் கோபமாகச் சொல்லி அனுப்பித்தான் கிளைவ்.

* * * * *

வர்மன் அழைத்துப் போன 'மோனிசித் திருக்கோல' யாத்திரிகர்களுக்கு மீண்டும் ஒரு சோதனை வந்தது. திரும்பவும் மராட்டியச் சுயேச்சைகள் பாதையில் பதுங்கி இருப்பதாகச் செய்தி வந்தது.

வர்மனும் இதரர்களும் யோசித்தார்கள். வேன்ஸானும் கலந்து கொண்டார். அன்றைய இரவுப் பொழுதை அங்கேயே கழிக்கத் திட்டமிட்டார்கள்.

ஒரு சத்திரத்தை அடுத்து தண்டு இறங்கினார்கள். பெண்களும் பல்லக்குகளும், சத்திரத்துத் தோட்டத்துக்குள் புகல் கொண்டன.

வர்மன் வேன்ஸானை விட்டுப் போகவில்லை. அவரிடம் இங்கிலாந்து தேசத்து ஆளும் முறையைப் பற்றி மேலும் மேலும் கேட்டுக் கொண்டிருந்தான்.

அந்த முறை மீது அவனுக்கு அடங்காத ஆர்வம் ஏற்பட்டது. வேன்ஸான் அந்த முறையைப் பற்றி விவரிக்க, விவரிக்க, இது வரை கண்டறியாத பொக்கிஷங்கள் அவன் கண்களில் படுவது போல் இருந்தது.

அவன் கேட்க, கேட்க, வேன்ஸான் வர்ணித்தவாறு போனார்.

இங்கிலாந்தில் நடப்பது உலகத்துக்கே ஒரு பரிசோதனை என்றார். பழங்கால அரசமரபை ஒரு அலங்காரத்துக்கு வைத்துள்ளார்கள். அரசர் பேரில் பார்லிமென்ட்தான் பெரும்பான்மை அதிகாரத்தைச் செலுத்துகிறது. அரசரிடம் இப்போது சில அதிகாரங்கள்தான் இருக்கின்றன. அவையும் சீக்கிரம். அந்த ஜனப் பிரதிநிதி கும்பலுக்கு வந்து விடும் என்று வேன்ஸான் உறுதி கூறினார்.

மறுநாள் காலை மராத்தியர் திடீரென்று வந்து தாக்கினார்கள். வர்மன் பக்கத்தில் ஐந்து பேர் இறந்தார்கள். எழுந்து முறையான சண்டைக்கு அவர்களை அழைக்குமுன் மராத்தியர் ஓடிவிட்டார்கள். நல்லவேளை, பொருள்

ஏதும் பறிபோகவில்லை. இறந்தவர்கள் ஊழியம் வந்த வேலைக்காரர்கள்.

ஆனால் நடந்த அந்தச் சில நிமிட சண்டையில் வர்மன் கலந்ததில் அவனுக்கு உடம்பில் பல காயங்கள் ஏற்பட்டன. சத்திரத்து அறையில் படுத்துவிட்டான்.

மீண்டும் தங்கள் குழுவை வலுப்படுத்திய பிறகே, புறப்பட வேண்டும் என்று திட்டமிட்டார்கள். சம்பளத்திற்கு வேலை செய்யும் வீரர்களைத் தேடி, குழுவில் பெரியவர் பலர் சுற்று வட்டாரத்திற்குள் சென்றார்கள்.

பாயில் கிடக்கும் வர்மனை அன்று மாலை நேரத்தில் சிந்து அணுகினாள்.

வர்மன் அவளைப் பார்த்த போது ஆச்சரியப்பட்டான்.

"நீங்கள் அரசகுமாரி என்று எல்லோருக்கும் நம்பிக்கை கொடுத்திருக்கிறோம். இங்கே வரலாமா?" என்றான் அவன்.

சிந்து உடனே பேசவில்லை. தனது கரு விழிகளை விரித்து ஆழ்ந்து அவனைப் பார்த்தாள்.

அவள் முகத்தில் சோகம் ஓடியிருந்தது.

"வீரரே" என்றாள் அவள். குரலில் தடுமாற்றம் ஏற்பட்டது.

"காலையிலிருந்து பார்க்கிறேன், தாங்கள் தண்ணீர் கூட அருந்தவில்லையே?" என்றாள்.

கையிலிருந்த பாத்திரத்தை அவனிடம் நீட்டினாள். அதில் சூடாகப் பால் நுரைத்து இருந்தது.

அவன் அதைப் பருகினான்.

மீண்டும் அவனைப் பார்த்துச் சோகமாக ஒரு மூச்சு விட்டு, "வீரரே! உங்களுக்கு நான் அநீதி இழைத்துவிட்டேன் இல்லையா?" என்றாள்.

"ஏன், என்ன அநீதி?" என்றான் அவன்.

"நீங்கள் ஏதோ காரியத்திற்கு வந்தீர்கள்! உங்களை நான் அனாவசியமாய் எங்கள் ராஜரீகங்களில் இழுத்து, வீணை தொல்லைகளுக்கு ஆளாக்கிவிட்டோம்!" என்றாள் அவள்.

"அதற்காக வருந்துகிறேன்! வேதனைப்படுகிறேன். உங்கள் தாயிடமிருந்து உங்களை நெடுநாள் பிரித்ததற்கு மிகவும் சோகப்படுகிறேன்" என்று அவள் தொடர்ந்து கூற,

அவள் கண்களிலிருந்து கண்ணீர் கலகல என்று பெயர்ந்து வந்தது.

அதைக் கண்ட வர்மன் திடுக்கிட்டு, "ஏன் இளவரசி, ஏன் இப்படி கண்ணீர் விடுகிறீர்கள்?" என்று பதறிப் போய்க் கேட்டான்.

சிந்து விம்மிக் கொண்டிருந்தாள். முகத்தைத் தலைப்பால் மூடி, விசிக்க ஆரம்பித்தாள்.

வர்மன் செய்வதறியாது திகைத்தான்.

(தொடரும்)

## வாரம் ஒரு கடிதம்



இனியவனே!

வாசித்த விஷயங்களை நீ வாழ்க்கைக்குப் பயன்படுத்த வேண்டும்.

இல்லையென்றால் நீ தரையில் போடுவதற்காகவே தங்கத் தூண்டில் வாங்கியது மாதிரி ஆகிவிடும்.

காலக் கரையான்களால் அழிக்க முடியாத அறக்கருத்துக்கள் மனிதகுலம் நமக்குத் தேக்கி வைத்திருக்கும் செல்வங்கள்.

ஒழுக்கத்தின் மதிப்பீடுகள் மாறிக் கொண்டே இருப்பினும் அடக்கம் போன்ற சில பண்புகளைக் காப்பாற்றியே தீருவது நமது கடமை என்றே கருதுகிறேன்.

என்னைப் பொறுத்த அளவில் அடக்கம் என்பதை ஓர் அடிமைச் சங்கிலி என்று கருதவில்லை.

அதை ஓர் ஆபரணம் என்றே கருதுகிறேன்.

அடக்கம் என்பதை ஒரு பக்குவம் என்றே நாம் அர்த்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

கைகட்டி, வாய்புதைத்து, முழங்காலிட்டு 'ஆமாம் சாமி' போடுவதல்ல அடக்கம்.

அடக்கமென்பது நாகரீகம் — அது ஒரு வாழ்க்கை முறை.

—இந்த உண்மையை எண்ணி நான் சிரித்துக் கொண்டே வருந்துகிறேன்.

என் இனிய இளைஞனே!

உனக்கு ஒரு ரகசியத்தைச் சொல்லுகிறேன்.

ஒவ்வொரு மனிதனும் தான் மதிக்கப்படுவதைத்தான் விரும்புகிறான்.

எல்லோரும் இங்கே அங்கீகாரத்திற்குத் தான் ஆசைப்படுகிறார்கள்.

நாம் அடக்கமாயிருப்பதுதான் அவர்களை அங்கீகரிப்பதன் அடையாளம்

# அடக்கம் என்னும் ஆபரணம்

"சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர்—
ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே"

—என்ற நீதிவெண்பா என் நினைவிற்கு வருகிறது. அடக்கமென்பது எதிராளியை மதிப்பது மாத்திரமல்ல; தன்னைத்தானே மதிப்பிட்டுக் கொள்வது.

எல்லா தேசங்களிலும், எல்லாக் காலங்களிலும் அறக்கருத்துக்கள் ரசிப்பதற்குரியவையாய் இருந்து வந்திருக்கின்றனவே தவிர, கடைப்பிடிப்பதற்குரியவையாய் இல்லை என்பதே கால விபத்து.

அறிஞர் செல்டன் சொன்னார்:

"எல்லோரும் பணிவைப் பற்றி உபதேசம் செய்கின்றனர். எவரும் அதன்படி நடப்பதில்லை. ஆனால் செவியால் மட்டும் கேட்டுத் திருப்தியடைகின்றனர். எஜமானன் அது தன் வேலைக்காரனுக்கு ஏற்றது என்று எண்ணுகிறான். ஜனங்கள் அது பாதிரிமார்களுக்கு ஏற்றது என்று எண்ணுகின்றனர். பாதிரிமார்கள் அது ஜனங்களுக்கு ஏற்றது என்று எண்ணுகின்றனர்.

பெரியவர்கள் தங்களின் வயதையே ஒரு தகுதியென்று கருதுகிறார்கள் — தப்பில்லை.

தங்களது நரையே ஒரு கிரீடமென்று நம்புகிறார்கள் — நம்பட்டும்.

அவர்களை மதிப்பதன் மூலமாய், அவர்கள் மட்டுமல்ல நீயும்தான் உயர்வு பெறுகிறாய்.

பூ மட்டுமல்ல, பூ வைத்த இடமும் மணப்பதில்லையா?

அது மாதிரிதான் இது.

இன்னொன்றும் சொல்கிறேன் உனக்கு—

அடக்கமென்பது உனது நற்குணங்களின் தொகுப்பு.

அதே நேரத்தில் உனது போர்க்குணங்களைப் புறக்கணிப்பதல்ல.

அடக்கம் உனது ஆபரணம் என்று சொன்னேனல்லவா?

சில நேரங்களில் அது உனக்கு ஆடையாகக் கூட இருக்கக் கூடும்.

புகைப்படம்: யோகா.

**கவிஞர் வைரமுத்து**

## ஜூலை மாதம்.... உங்களது மிக ராசியான மாதம்!

Rs. 12.75

யூனிட்டுகளை வருடத்திலேயே மிகக் குறைந்த விலையான

ரூ. 12.75க்கு பெறுங்கள்!

# UNITS

ஜூலை முழுவதும் யூனிட்டுகளை மிகக் குறைந்த விலையில் வாங்கலாம். வருடத்திலேயே மிகக் குறைந்த விலை ரூ. 12.75 தான்!

யூனிட்டுகள் உங்களுக்கு ஏராளமான பலன்களை அளிக்கின்றன.

வருடா வருடம் யூனிட்டுகள் மேன் மேலும் அதிக டிவிடெண்டுகளை அளித்து வருகின்றன; இந்த வருடம் 14.25% டிவிடெண்ட் அளித்துள்ளன! யூனிட்டுகளை எளிதாகவும், விரைவாகவும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

மேலும் யூனிட்டுகள் உங்கள் முதலீட்டிற்கு பாதுகாப்பு அளிக்கின்றன. விசேஷ வரிச் சலுகைகளும் உண்டு!

யூனிட்டுகளை வாங்குவதோ மிகச் சுலபம்! அருகாமையில் உள்ள எங்கள் அலுவலகங்களிலோ அல்லது வங்கிகள் மற்றும் முக்கிய தபால் நிலையங்களிலோ நீங்கள் யூனிட்டுகளை வாங்கலாம். மேலும், எங்கள் முக்கிய பிரதிநிதிகள் அல்லது ஏஜெண்டுகளிடம் இருந்து விவரம் அறியலாம்.

இன்றே யூனிட்டுகளில் முதலீடு செய்வீர். பதினைந்து லட்சத்திற்கும் மேலான மக்களின் நம்பிக்கையை யூனிட்டுகள் பெற்றுள்ளன!



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

தலைமை அலுவலகம்: பம்பாய்-20

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

பிராந்திய செயலகம்:
ரெஜினா மான்ஷன்
46, செகண்ட் லைன் பீச்,
சென்னை 600 001.
போன்: 27433/24146

கேரளா செயலகம்:
12/758, தெக்கே மடம் சாலை,
திருச்சூர் 680 001, போன்: 24690

ஆந்திர பிரதேஷ் செயலகம்:
27-11-6B மேரி சாலை, கவர்னர்பேட்,
விஜயவாடா 520 002. போன்: 63964

**உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.**

---

தமிழ்நாட்டிலுள்ள எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:- திரு. ஏ. தனபால், கோயம்புத்தூர், போன்: 34776 (O). திரு. எம். ராமமூர்த்தி, மதுரை, போன்: 30160 (O) 43179 (R). திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர், போன்: 1224 (R). திரு. என். கே. இங்கர்சால், சேலம், போன்: 51520 (R). திரு. எம். ராமலிங்கம், திருச்சிராப்பள்ளி, போன்: 28280 (O). திரு. பி. நாராயணன், வேலூர், போன்: 21575 (O).

---

Sista's - UTI.327.85 TM A

# சிறுபான்மையினர் நலன்

"ஹிந்துஸ்தானி சம்பந்தமாகச் சென்னை மாகாண முஸ்லீம் லீக் தலைவர்களின் ஆதரவை எவ்வளவோ முயன்றும் ஸி. ஆரால் பெற முடியவில்லை. "ஹிந்திக்கும் ஹிந்துக்களுக்கும் சம்பந்தமில்லை; ஹிந்து என்பது சம்ஸ்கிருத வார்த்தை அல்ல, பாரசீக வார்த்தை" என்று ஸி. ஆர். விளக்கினார். மேலும் அரசு ஹிந்துஸ்தானி என்ற சொல்லையே பயன்படுத்த விரும்பியது. "என்ஸைக்ளோபீடியா பிரிட்டானிகா என்ற கலைக் களஞ்சியம் அளித்த விளக்கத்தின் படி ஹிந்துஸ்தானி என்பது இஸ்லாமியர்களும் ஹிந்துக்களும் எங்கிருப்பினும் புரிந்து கொண்ட வளம் மிக்க மொழி" என்றும் விளக்கினார் ஸி. ஆர். முஸ்லீம் மாணவர்கள் உருது எழுத்துக்களில் ஹிந்தி பயின்றால் கூடத் தமக்குச் சம்மதமே என்றும் ஸி. ஆர். திரும்பத் திரும்பக் கூறி வந்தார்.

"முடியாது" என்று மறுத்து விட்டனர் முஸ்லீம் லீக் எம். எல். ஏக்கள். "நீங்கள் அம்மொழியைக் கற்றுக் கொடுப்பதை எதிர்ப்போம், அதை ஹிந்தி என்றுதான் அழைப்போம்" என்றனர். சென்னை மாகாண அமைச்சரவை ஹிந்தியைத் திணித்து முஸ்லீம்களை வருத்துவதாக மகாத்மாவிடம் புகார் செய்தார் ஜின்னா.

இதைவிடப் பெரிய புகார் ஒன்றையும் செய்தார் ஜின்னா. காங்கிரஸ் ஆட்சியிலிருந்த எல்லா மாகாணங்களிலுமே முஸ்லீம் சமூகத்தினர் அரசாங்க வேலைகள் பெறுவதற்கான போட்டியில் வாய்ப்புகளை இழந்து கொண்டிருப்பதாகச் சொன்னார். லீக் அமைத்த பிர்பூர் கமிட்டி அவர் கருத்தை எதிரொலிப்பதே போல் குற்றம் சாட்டியது. இந்தியாவின் பிரதம நீதிபதி சர் மாரிஸ் க்வையர் இக்குற்றச்சாட்டை ஆராய்ந்து உண்மைகளைக் கண்டறியலாம் என்று காங்கிரஸ் கூறிய யோசனையை லீக் நிராகரித்து விட்டது.

சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில் இந்தக் குற்றச்சாட்டில் உண்மையில்லை என்பதை ஸி. ஆரால் நிரூபிக்க முடிந்தது. சட்டசபையில் அவர் சரமாரியாய் உதிர்த்த புள்ளி விவரங்கள் குற்றச்சாட்டை நொறுக்கி விட்டன; "மாகாணத்தின் மொத்த ஜனத்தொகையில் 6 முதல் 7 சதவிகிதத்தினரே முஸ்லீம்கள்" என்பதை அவர் அவைக்கு நினைவூட்டினார். "முஸ்லீம் பட்டதாரிகள் மொத்த பட்டதாரிகளில் ஏறத்தாழ மூன்று சதவிகிதத்தினர், 85,352 அரசு உத்தியோகங்களுள் 12,525 பதவிகளை முஸ்லீம்கள் தான் வகிக்கிறார்கள். அதாவது 14.7 சதவிகிதம்."

"இவர்களில் பியூன்கள் எவ்வளவு பேர்?" என்று குறுக்கிட்டு வினா எழுப்பினார் ஒரு முஸ்லீம் லீக் எம். எல். ஏ.

ஸி. ஆர். பதில் சொன்னார்: "முஸ்லீம்களுக்குக் கிடைத்துள்ள அளவு பியூன் உத்தி



* ஜின்னா.



ராமகிருஷ்ண பரமஹம்ஸர் நிறுவிய இயக்கத்தைப் போல, தமிழகத்திற்குச் சேவை செய்யும் இளைஞர்களின் பாடி வீடாக எம். ஜி. ஆர். மன்றங்கள் இருக்கின்றன.

—முசிறிப்புத்தன்.

அமெரிக்காவில் எம். ஜி. ஆர். அவர்களின் சிறுநீரகத்தையே மாற்றி வைத்துச் சிகிச்சை செய்யும் அளவுக்கு விஞ்ஞானமும் மருத்துவமும் முன்னேறியிருக்கிறது. ஆனால் நமக்குத் தெரிந்ததெல்லாம் கோயில் கோயிலாகப் பிரார்த்தனை செய்ததுதான்!

—அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன்.

கடவுளுக்குத் தெரிந்திருக்கிறது. எம். ஜி. ஆர். ஆட்சி ஒரு காலத்தில் தமிழ் நாட்டில் வரும்; அப்படி வருகிறபோது சாலைகளையெல்லாம் நிச்சயமாகக் கவனிக்க மாட்டார்கள். அப்போது ஓடங்கள்தான் பயன்படும். எனவே இப்போதே ஓடத்தில் ஏறிப் பழகிக் கொள்வோம் என்று திருக்குளம்புதூர் ஆண்டவன் அப்போதே ஓடம் ஏறிப் பழகிக் கொண்டிருக்கிறார்.

—கலைஞர் மு. கருணாநிதி.

பல ஆண்டுகளாக நான் கண்டு கொண்டிருந்த கனவு நனவாகி விட்டது. இப்போது தான் மகிழ்ச்சியோடு மனநிறைவையும் பெற்றிருக்கிறேன்.

—மகாராஷ்டிர முதல்வர் சிவாஜிராவ் பாட்டீல்.

சீக்கியர்களைப் பிரிவினைவாதிகள் என்றும் தீவிரவாதிகள் என்றும் அரசாங்கம் திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கிறது. உண்மையில் அரசாங்கம்தான் தீவிரவாதி — பிரிவினைவாதி!

—லோங்கோவால்.

ஜனாதிபதி, சுப்ரீம் கோர்ட் தலைமை நீதிபதி ஆகியோரின் டெலிபோன்களை மத்திய புலனாய்வுத் துறையினர் டேப் செய்கிறார்கள். மத்திய புலனாய்வுத் துறை பற்றி விசாரிக்க ஒரு விசாரணைக் கமிஷன் வைத்தால் வாட்டர் கேட் ஊழலை விட அதிகமான ஊழல் வெளிப்படும்!

—வாஜ்பேயி.

## ஸ்பாட்லைட்

யோகங்கள் இதர சமூகத்தினருக்குக் கிடைக்கக் கூடுமானால் அவர்கள் அரசுக்கு என்றென்றும் நன்றி செலுத்துவார்கள்!"

முஸ்லீம்களுக்கு ஹிந்துக்களைக் காட்டிலும் வயது வரம்பு அதிகரிக்கப்பட்டிருந்தது. 18 மாத கால காங்கிரஸ் ஆட்சியில் மாகாண பப்ளிக் சர்வீஸ் கமிஷன் 261 முஸ்லீம் அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்தது. இதற்கு முந்தைய 18 மாதங்களில் 168 முஸ்லீம் அதிகாரிகளே நியமிக்கப்பட்டிருந்தார்கள்., 35 ரூபாய்க்குக் குறைவான ஊதியம் பெற்ற என். ஜி. ஓக்களில் 19 சதவிகிதத்தினர் முஸ்லீம்கள். 35 முதல் 100 ரூபாய் வரை சம்பளம் வாங்கிய பிரிவினருள் 8 சதவிகிதத்தினர் முஸ்லீம்கள். நூறு ரூபாய்க்கு அதிகமாகச் சம்பளம் பெற்றவர்களுள் முஸ்லீம்களின் தொகை 5 சதவிகிதத்துக்கு அதிகம். — அதாவது மொத்த ஜனத்தொகையில் முஸ்லீம்கள் எண்ணிக்கை எந்த விகிதாச்சாரத்தில் இருந்ததோ அதே விகிதாச்சாரத்தில் என். ஜி. ஓக்கள் இருந்தனர். கெஜெட் பதிவு பெற்ற அதிகாரிகளைக் கணக்கெடுத்தால் அவர்களுள் 5.84 சதவிகிதம் முஸ்லீம்களே.

இதர சில முஸ்லீம் சதவிகிதங்கள்: ஹைகோர்ட் நீதிபதிகள் 7%, ஜில்லா நீதிபதிகள் 15½%, சென்னை நகர நீதிபதிகள் 35%, மாகாண நீதித் துறை ஊழியர்கள் (மாதம் 35 ரூபாய்க்கு மேல் வருவாய்) 7%, மாதம் 35 ரூபாய்க்குக் குறைவாய் வருமானம் உள்ளவர்கள் 25%, போலீஸ் டெபுடி சூப்பரின்டென்டெண்டுகள் 18%, போலீஸ் இன்ஸ்பெக்டர்கள் 19%, சப்—இன்ஸ்பெக்டர்கள் 14%, கான்ஸ்டபிள்கள் 22%, பிர்புர் கமிட்டியின் குற்றச்சாட்டுக்கள் தவிடுபொடியாயின.

காங்கிரஸ் ஆட்சியில் சிறுபான்மையினர் நடத்தப்பட்ட முறைகளை ஆய்வு செய்யுமாறு வைஸ்ராய் உத்தரவிட்டிருந்தார். உலக மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த கால கட்டத்தில் பெரும்பாலும் பிரிட்டிஷ் அதிகாரிகளே தயாரித்தளித்த ஆய்வு அறிக்கையில் சென்னை மாகாண ஸி. ஆர். மந்திரி சபைக்கு மிக நல்ல பெயர் கிடைத்திருந்தது. அந்தக் கமிட்டியின் இணைப்பாளர் ஓர் உதாரணத்தைச் சுட்டிக் காட்டினார்: ஒரு துறையில் இரண்டு முஸ்லீம்கள் ஒரே சமயத்தில் பதவி உயர்வு பெற்ற போது மந்திரி ஒருவர் ஆட்சேபனை தெரிவித்திருந்தார். இதை எர்ஸ்கைன் பிரபு விசாரிக்க முற்பட்ட போது ஸி. ஆர். உடனே ஆட்சேபனைகளை வாபஸ் பெறச் செய்து இரண்டு அதிகாரிகளுக்கும் பதவி உயர்வு அளித்தார்.

* * * * *

ஆட்சியின் ஆரம்ப நாட்களில் "மந்திரி சபையில் இரண்டு ஹரிஜன உறுப்பினர்களேனும் இருக்க வேண்டும்" என்று ஒரு

சட்டசபை உறுப்பினர் கருத்துத் தெரிவித்த போது, "ஏற்கெனவே இருவர் உள்ளனரே— முனுசாமி பிள்ளையும் நானும்!" என்று பளீரென பதில் அளித்தார் ஸி. ஆர். பிள்ளை ஒரு சிறந்த ஹரிஜன உறுப்பினர். அவரிடம் தம் சமூகத்தைப் பற்றிய நன்னம்பிக்கையும் அசாதாரணமான மென்மையும் இணைந்து காணப்பட்டன. 215 பேர்கள் கொண்ட சட்டசபையில் 30 பேர்கள் ஹரிஜனங்கள். 1932—ல் காந்தியின் உண்ணாவிரதம் காரணமாகவும் தொடர்ந்து உருவான உயர் ஜாதி ஹிந்து — ஹரிஜன் ஒப்பந்தத்தாலும் ஹரிஜனங்களுக்குத் தொகுதி ஒதுக்கீடு கிடைக்காமல் போய் விட்டது. அப்படி கிடைத்திருந்தாலும் கூட அவர்களுக்கு 18 இடங்கள் தான் சென்னை மாகாணத்தில் ஒதுக்கப்பட்டிருக்கும்!

தென்னகத்தின் முன்னணி ஹரிஜன் தலைவர்களுள் எம்.ஸி. ராஜா ஒருவர். காங்கிரஸ்காரர் அல்ல என்றாலும் முப்பதுகளின் ஆரம்பத்தில் ஸி. ஆருடன் இணைந்து சீர்திருத்த முயற்சிகளை மேற்கொண்டிருந்தார். பின்னால் காங்கிரஸுடன் கருத்து வேற்றுமைகள் ஏற்பட்டதால், ஸி. ஆர். மந்திரிசபைக்கு முற்பட்ட — பிரிட்டிஷ் மேலாதிக்கத்தினால் நியமிக்கப்பட்ட — தற்காலிக மந்திரிசபையில் எம். ஸி. ராஜா பதவி வகித்து வந்தார். இப்போது, 1938 ஆகஸ்டில், சமுதாயத்தில் ஹரிஜனங்கள் சந்திக்க நேர்கிற சங்கடங்களை அகற்ற அவர் ஒரு மசோதா கொண்டு வந்த போது அரசு அவருக்கு முழு ஆதரவு அளித்தது. அம்மசோதா சட்டமாக்கப்பட்ட போது, சில ஆண்டுகளுக்கு முன் அதைத் தயாரிப்பதில் ஸி. ஆர்தான் தமக்கு உதவினார் என்பதை நன்றியுடன் வெளியிட்டார் ராஜா.

இந்தச் சட்டத்தின் கீழ் வேலை வாய்ப்புக்கள் கிணற்றடிகள், பொதுக் கழிப்பிடங்கள், சாலைகள், போக்குவரத்து வாகனங்கள், பள்ளிகள் மற்றும் கல்லூரிகளில் ஹரிஜனங்களை ஒதுக்கிவைப்பதோ வேற்றுமை பாராட்டுவதோ குற்றமாக்கப்பட்டது.

ராஜாஜி ஆட்சியின் போது முதல்தர வேலைகளில் அமர்த்தப்பட்ட பிற்படுத்தப்பட்ட வகுப்பினரின் எண்ணிக்கை இரட்டிப்பாயிற்று. முன்பு 18 மாதங்களில் 25 பேர்களைத் தேர்ந்தெடுத்த இடத்தில் இப்போது 55 பேர்களைத் தேர்ந்தெடுத்தது பப்ளிக் சர்விஸ் கமிஷன். ஜூலை 1937 முதல் ஆகஸ்டு 1939 வரை நியமிக்கப்பட்ட 907 கான்ஸ்டபிள்களுள் 137 பேர் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர். அந்தக் காலத்துக்கு இது பிரமிக்க வைத்த விகிதாச்சாரம். அரசாங்க அலுவல்களுக்கு மனுச் செய்த ஹரிஜனங்களுக்கு வயது வரம்பு பெருமளவுக்குத் தளர்த்தப்பட்டது; ஹரிஜனங்களுக்கு வயது வரம்பை நீக்கி விடலாமா என்று கூட அரசு யோசித்து வந்தது.

இது தவிர ஹரிஜன ஆலயப் பிரவேசம் ஸி. ஆரின் லட்சியமாகப் பல ஆண்டுகளாகவே இருந்து வந்தது.

(தொடரும்)

தமிழாக்கம்: சிதாரவி

பெருவிரல் இரண்டும் கட்டப்பட்டு ஆறடி உயரத்துக்கு நீட்டிய நிலையில் முறிந்த மரமாகக் கிடந்தார் அப்பா. கலைந்த நிலையில் துவண்டு போய் காலடியில் கிடந்தாள் அம்மா...

தலைமாட்டில் நல்லெண்ணெய் விளக்கு...

"டெல்லியிலிருந்து வரணும்... ஃப்ளைட் பிடிச்சாக் கூட இன்னிக்கு வர்றது சாத்தியமில்லை... நாளைக்குத்தான் முடியும். நா வேணும்ணு ஐஸுக்கு ஏற்பாடு பண்றேன். ராத்திரி பிரசர்வ் பண்ணி..."

இரண்டாவது மன்னி ஏதோ கிசுகிசுக்க, அக்கா இடைமறித்தாள்...

"டேய் ராம், நாளைக்கு விடிஞ்சா சனிக்கிழமைடா."

"...?"

"சனிப் பொணம் தனிப் போகாதும்பா.... குடும்பத்துக்கு ஆகாது. அது மட்டுமில்ல, நம்ம மன்னி ராத்தங்க வைக்க மாட்டா. எடுத்துறலாம். பாஸ்கர் வந்தா சொல்லிக்கலாம். கணேசன் அடுத்த பிள்ளைதானே, காரியத்தைக் கவனிக்கட்டும்..."

பங்கஜம் எல்லோருக்கும் அக்கா... அந்த வீட்டின் முதல் பெண்... அவள் வார்த்தைகளை உதறும் பலம் அங்கு யாருக்கும் இல்லை...

கணேசனின் மனைவி கொஞ்சம் மதர்ப்பாகச் சிரித்தாள்... முதல் பிள்ளை இருக்க தீச்சட்டி தன் கணவன் கைக்கு வந்ததற்காகக் கொஞ்சம் பெருமை கலந்து நடந்தாள்...

தலையில் நீர் வார்த்து, ஈர வேட்டியோடு வந்தான் கணேசன்.

வாசலில் நெருப்பு மூட்டப்பட்டு மந்திரங்கள் தொடங்க,

காதில் கர்ண மந்திரம் ஜபித்துக் கொண்டிருக்கிறான் கணேசன்.

வந்தவர்களில் இருவர் பாடை கட்டும் வேலையில் முனைப்பாக இருந்தார்கள்.

"அம்மாவுக்கு ஏதாவது ஆகாரம் குடுத்தியோ?" வித்யாவிடம் கேட்டாள் பங்கஜம்.

"எப்படீக்கா? அப்பாவை எடுக்கறதுக்கு முன்னால?"

"யாருடீ இவ? இலை போட்டு சாதமா போடச்சொல்றேன்...கொஞ்சம்ஹார்லிக்ஸ் ஸாவது குடுறி... அவளுக்கு இப்ப உடம்பு, மனசு எல்லாமே இத்துப் போயிருக்கும்..."

"வேண்டாம்" என்று தலையசைத்தாள் அம்மா.

மௌனமாக அழுது கொண்டிருந்த வித்யா, மனசுக்குள் ஒடிந்து போயிருந்தாள்...

அந்தக் குடும்பத்தில்...

இன்னும் கல்யாணமாகாத...

கடைசிப் பெண்...

அப்பாவால் கரையேற்ற முடியாமல் போன இளம் படகு...

பாடை தூக்கப்பட்டு...

தீச்சட்டியோடு கணேசன் முன்னால் நடக்க, ஒப்பாரி ஒலி அவனைப் பின் தொடர,

காலில்லாத கட்டிலில்...

அப்பாவின் ஆழ்ந்த உறக்கம்...

ஊரறிய நடந்தது.

ஆயிற்று... அப்பாவின் மார்பில் வைக்கப்பட்ட அக்னி தன் பெரிய நாக்குகளைப் பிளந்து கொண்டு உடம்பு முழுக்க ஆக்கிரமித்துக் கொள்ள,

தூக்கிய நீர்ச் செம்போடு திரும்பிப் பாராமல் நடக்கத் தொடங்கினான் கணேசன்...

# காய்ந்த மரம்



வீட்டை அலம்பிக் கொண்டிருந்தாள் வித்யா... இருப்பவர்களுக்கு ரன்னிங் காமெண்டரி கொடுத்துக் கொண்டிருந்தாள் கணேசனின் மனைவி... அப்பா தனக்கு ஜட்டி போட்டு விட்ட காலத்திலிருந்து தன் புராணத்தை பங்கஜம் ஒரு பக்கம் அறுக்க ஆரம்பித்தாள்...

''அப்புறமா சாப்பாடு?'' யாரோ கவலையோடு கேட்க,

எங்காத்துலேர்ந்து வரும் என்று ஒரு குரல் ஆண்கள் பக்கமிருந்து வந்தது...

ஓ... நடேச மாமாவா?

வயதான அந்த மனிதர் மௌனமாகத் தலையசைத்தார்... தன் நண்பரை இழந்த சோகத்தில் பெரிய அளவு காயப்பட்டிருந்தார்...

பத்து நிமிடங்களில் அவர் மனைவி சாப்பாட்டோடு ரிக்ஷாவில் வந்து இறங்கினாள்...

இலை போட்டு முதல் பந்தி ஆரம்பித்த போது, அழுது கொண்டே 'கொஞ்சம் அவியல் போடு' என்று சாப்பாட்டை விளாசிக் கொண்டிருந்தாள் பங்கஜம்.

''பாயசம் இருக்கோ? வயசாயிட்டுத்தானே அப்பா போனார்... இது கல்யாணச் சாவு...'' யாரோ விளக்கம் கொடுக்க,

சாப்பாடு கொண்டு வந்த மாமி, மௌனமாக அம்மாவின் பக்கத்தில் உட்கார்ந்தாள்...

அம்மாவின் அழுகை பெரிதானது...

மாமி அம்மாவின் தோளில் மெல்ல அழுத்தினாள்.

''மாமி, நீங்க கொஞ்சம் இப்படி வாங்கோ... உங்களைப் பார்த்தா அம்மாவுக்கு அதிகமாறது...'' பங்கஜம்.



மாமி முகம் சுருங்க எழுந்தாள்.

அம்மா சட்டென ஏதோ சொல்ல முற்பட, மாமி பார்வையால் தடுத்துவிட்டு நகர்ந்தாள்...

''யாரிந்த மாமி? கிசுகிசுப்பாக கணேசனின் மனைவி வத்சலா கேட்டாள்.

''அது இருக்கும் முப்பது வருஷத்துக்கும் மேலா இந்த ஊர்லயே... அம்மாவோட பெட்... துதக்குன்னு இந்த ஆத்துக்கு ஓடி வந்துரும்... பட்ட மரம்... பூக்காத வயிறு... மங்கல காரியம்னு முதல்ல வந்து நிப்போ... எங்களுக்கெல்லாம் அச்சானியமாப் படும்... அம்மாக்கு அவ மேல ஒரு கிரேஸ்...''

பங்கஜம் பேசியது சன்னமாகக் காதில் விழ, வேதனை கப்பிய முகத்தோடு வாசலுக்கு வருகிறாள் மாமி...

இப்போதெல்லாம் அவளுக்கு மரத்து விட்டது...

மலடி என்ற சொல் அவளது காயத்தில் பட்டுப் பட்டுத் தழும்பாக மாறி விட்டது...

இதே பங்கஜம்...

வாய் கூசாமல் பேசும் பங்கஜம்...

குழந்தைப் பருவத்தில் வளர்ந்ததே இந்த மாமியிடம்தான்...

விதம் விதமாக அலங்கரித்து,

வேளைக்கொரு இன்பண்டம் கொடுத்து...

ஏறத்தாழ...

பங்கஜம் நடப்பதே...

இவர்கள் தோளின் மேல்தான்...

அதே பெண்ணின் விமர்சனம்...

தான் பட்டமரமாம்...

அந்த வீட்டின் அத்தனை குழந்தைகளையும் ஒரு நிலைவரை வளர்த்ததே இந்த மாமிதான்...

ஆனாலும் ஒரு மங்கல நிகழ்ச்சியில் வலிக்க வலிக்க இவளை அடிப்பது உள்ளே உள்ள மிருகங்களின் குரூர ஆசை.

மறுநாள் மாலை நான்கு மணிக்குத்தான் பாஸ்கரனால் வர முடிந்தது...

''நான் வர்ற வரைக்கும் பொறுமையா இருக்க முடியலே? அப்பாவோட முகத்தைக் கூட எனக்கு காட்டாத அளவுக்கு நான் என்ன பாவம் செஞ்சேன்?''

''கோச்சுக்காதேடா பாஸ்கரா... பிரச்னை இதுதான்... இன்னும் சஞ்சயனம் நடக்கலே... நீ வந்துதானே மத்தது... பாத்தியதை ஒனக்குத் தானே!''

கணேசன் பெண்டாட்டி முறைத்தாள்...

அடுத்து வந்த நாட்கள் சரசரவென நகர,

அப்பாவின் சடங்குகள்...

தடபுடலாக நடந்தது...

பதிமூன்று நாட்களும் இறக்கை கட்டிக் கொண்டு பறக்க,

அத்தனையும் முடிந்து போனது...

இனி பாதி பென்ஷன்...

பார்ட் டைம் இல்லை...

**தேவிபாலா**

லக்கேஜ் பெட்டித் தயாரிப்புத்
தலைவர்களின் படைப்பு—

# விஐபி

# கன்கார்டு

வந்திறங்குது இப்போது—

இதோ, ஜெட் யுகக் கட்டழகுள்ள
புதிய விஐபி கன்கார்டு! நாகரீக
நரம்போடிய அலாதி ஸ்டைலிங்.
கண்டறியாத வர்ண வகைகள்:
பீச் க்ரீம் (செவ்விள மஞ்சள்),
டெஸர்ட் பிரவுன் (மணற் கபில
நிறம்), மிஸ்ட் க்ரே (பனிச்
சாம்பல்), க்ரீம் சாக்கலேட்,
மேலும் பலப் பல. உட்புறமோ
இடவசதி மிகுதி.

ஓடோடிப் பார்வையிடுவீர்:
அருகிலுள்ள வியாபாரியிடம்...
சொகுசு லக்கேஜ் புதுவரவுகள்.

## ஆகாயமெட்டும் எங்கள் அதிநவீனக் கற்பனை.




**தேர்ந்தெடுக்க மிகப் பல வகைகள்,
வருங்கால யோக வரவுகளோ மேலும் பலப்பல.**

LINTAS VIP M 10 2013 TM

இன்னும் தாலிக்குக் காத்திருக்கும் இருபத்தாறு வயசு வித்யா...

தள்ளாத அம்மா...

யார் பொறுப்பை ஏற்பது?

பங்கஜம் பேச்சை ஆரம்பித்தாள்...

"அம்மாவும் வித்யாவும் இனிமே தனியா இருக்கறது சாத்தியமில்லே... பாஸ்கரா நீதான் முதல் பிள்ளே; என்ன சொல்ற?"

"நீ எனக்கும் பெரியவளாச்சே... நீயே சொல்லு!"

"நா என்னடா சொல்லமுடியும்? இன்னொரு ஆத்துப் பொண்ணு நா... என் பிரச்னையே தலைக்கு மேல. அவா மனுஷாளுக்கு செஞ்சு செஞ்சு நொடிஞ்சாச்சு. நான் என்னால நேரம் கிடைச்சா அம்மாவை வந்து பார்த்துக்க முடியும். ரெண்டு நாள் அவ கூட இருக்கலாம்... வேறென்ன முடியும்?" அம்மாவின் காதுகளையே பார்த்துக் கொண்டு பேசினாள் பங்கஜம்... மிஞ்சியிருந்தது ஒரு வைரத்தோடு.

பாஸ்கரன் வாயைத் திறப்பதற்குள் 'ணங்' கென்று விலாவில் இடித்தாள் வசந்தி.

"சித்த உள்ள வாங்கோ..."

"என்னடி?"

உள்ளே போனாலும் எல்லோரும் கேட்கும் படிதான் பேசினாள்...

"மூத்தவர்னுதான் பேரு... முகத்தைக் கூட உங்களுக்குக் காட்டலே... அவ்ளோ மரியாதை இந்த வீட்டிலே!"

"வைக்கறது தப்புடி..."

"தப்பும், சரியும் எடத்துக்கு எடம் மாறும்... நியாயங்களே நாம உண்டாக்கறதுதான்... நம்மகிட்ட என்ன இருக்கு? (ஸ்டேட் பாங்கில் எஃப்டியில் இருபத்தஞ்சு) இருக்கறது ரெண்டும் பொண் குழந்தைகள் (இப்போதே நகைகள் ரெடி) வாழ வேண்டாமா?" (ஹெச். ஐ. ஜி. பிளாட்) அதுனால எந்தப் பொறுப்பையும் ஏத்துக்க வேணும்... இன்னும் ரெண்டு பிள்ளேகள் இருக்கா... அவா பார்த்துக்கட்டும்... கணேசனுக்கு பெண் குழந்தைகளே இல்லே" கிசுகிசுப்பாகச் சொன்னாள்.

வெளியே வந்தார்கள்...

"நாங்க வேணும்னு மாசம் அம்பது ரூபா அம்மா பேருக்கு அனுப்பறோம். அதுக்கே நாங்க ரொம்ப கஷ்டப்படணும். செலவைக் கட்டுப்படுத்தணும் (வீடியோ கேசட் மாசம் இருநூறு ரூபாய்).

அம்மா பதில் பேசாமல் நிலைத்த பார்வையோடு இருந்தாள்...

"சரி கணேசா நீ?"

"அவ்ளவ் வசதியோட இருக்கற பாஸ்கரனே முடியாதுன்னு சொல்றச்சே நா என்னக்கா செய்ய முடியும்?"

"வித்யாக்குக் கல்யாணம்?"

"அவ்ளோ பெரிய பொறுப்பு என்னால எப்படிச் சுமக்க முடியும்? நான் என்ன சொந்த வீடா கட்டியிருக்கேன்? (பிளாட் மட்டுந்தானே வாங்கியிருக்கேன்!) வித்யா வேணும்னு கூட வந்து இருக்கட்டும்! (மனைவியும் வேலைக்குப் போவதால் வீட்டில் சமைக்க ஆளில்லே)"

"அப்பமன்னு அம்மா?"

"ஏன், ராம் பார்த்துக்கட்டுமே!"

# மருத்துவமனை அனுபவம்



**போட்டி: 10**

மருத்துவமனையில் பலருக்கும் பலவித விசித்திரமான அனுபவங்கள் ஏற்பட்டிருக்கும். அந்த அனுபவங்களை நீங்கள் எப்படி ஏற்றுக் கொண்டீர்கள். அல்லது அவற்றால் நீங்கள் எப்படிப் பாதிப்புக்குள்ளானீர்கள் என்பதை எழுதுங்கள். கீழுள்ள வெற்றிடத்தில் எழுத வேண்டும். இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்பும்போது உறையின்மேல், 'மருத்துவமனை அனுபவம்' என்று தவறாமல் குறிப்பிடுங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர, குலுக்கல் முறையில் ஒருவருக்கு வி. ஐ. பி. ஸூட்கேஸ்!

**முடிவு தேதி: 22.7.85.**

**இன்னும் 43 விலையுயர்ந்த வி. ஐ. பி. ஸூட்கேஸ்கள் உங்கள் இல்லங்களுக்கு வந்து சேரக் காத்திருக்கின்றன என்பதை மறந்து விடாதீர்கள். வாரம் தவறாமல் போட்டியில் கலந்து கொள்ளுங்கள்.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

**வி.ஐ.பி. ஸூட்கேஸ் பரிசுத்திட்டம்**

சிறிக் கொண்டு வந்தான் ராம்...

''நான் பாக்கறது 'ரெப்' உத்தியோகம்... இருபத்தஞ்சு நாள் பையைச் சுமந்துண்டு ஊர் ஊரா அலையறேன்... அம்மாவையும் பையோட சுமந்துண்டு அலையச் சொல்றியா?''

வித்யா குமுறினாள் நெஞ்சுக்குள்...

ஆளுக்குஆள் அவரவர்கள் அபிப்பிராயத்தைச் சொல்லிவிட்டு நகர,

மூட்டை கட்டும் படலம் மும்முரமாகத் தொடங்கியது...

அம்மா நெஞ்சு குமுற, அழத் தெரியாமல், முகம் சுருங்கிப் போய் மாமியைப் பார்த்தாள்...

''எல்லாத்தையும் பார்த்துண்டும், கேட்டுண்டும்தான் நான் இருந்தேன். மாமா வாசல்ல இருக்கார்...''

''இன்னும் நீங்க விட்டுக்குப் போகலியா?''

''நீங்க இன்னும் வரலியே!''

''புரியலே... நானு?''

''ஆமா... உங்களையும் வித்யாவையும் அழைச்சுண்டு போகத்தான் காத்துண்டு இருக்கோம்... வித்யாவுக்கு நாங்க கல்யாணம் பண்ணி வைக்கறோம்... உங்களை ஆயுசு பரியந்தம் நான் பார்த்துக்கறேன்... நீங்க என் சகோதரி...''

அம்மா அதுவரை வாய்விட்டு அழாதவள் பெரிதாக அழத் தொடங்கினாள்...

''அழாதீங்க மாமி... என்னால உங்க கண்ணீரைப் பொறுத்துக்க முடியாது... ஏன்னா, ஊரெல்லாம் என்னை பட்டமரம், பூக்காத வயிறுன்னு கேலி செஞ்சப்ப, என்னை துக்கிரின்னு ஒதுக்கி வச்சப்ப, எனக்கு இடம் கொடுத்த ஒரே ஆத்மா நீங்கதான்...

''நினைவிருக்கா? பங்கஜத்துக்கு வளை காப்பு வந்தப்ப, ஊரையே எதிர்த்துண்டு, அவளுக்கு என் கையால அப்ப வளையல் போடச் சொன்னது நீங்கதான்... கணேசனோட முதல் பொறந்த நாளுக்கு அவனைக் குளிப்பாட்டினதே நான்தான்... நான் பட்ட மரந்தான்... அந்த பட்டமரத்துக்கும் பன்னீர் விட்டு போஷிச்சது ஒரு காலத்துல நீங்க தானே... நீங்க என் தெய்வம்... என் தாயார்... புறப்படுங்க... ஏன்னு! போய் டாக்ஸி கொண்டு வாங்கோ...

அம்மா அழுகையோடு உரத்த குரலில் பேசத் தொடங்கினாள்.

''மாமி நீங்க அதிர்ஷ்டக்காரி...

''மலடிங்கற பேர் கிடைக்கப் புண்ணியம் பண்ணியிருக்கணும்...

''பட்ட மரமா வாழறது பூர்வ ஜென்ம புண்ணியம்.''

மாமி மிரண்டாள். அம்மாவுக்குப் பைத்தியமா?

''பயப்படாதேள்... நா சரியாத்தான் இருக்கேன்... காய்ச்ச மரமா இருக்கேன்... எத்தனை கல்லடி பார்த்தேளா?

''பட்ட மரம்ங்கற வார்த்தைகளைத் தாங்கிக்க ஒரு வயசு இருந்தது ஒங்களுக்கு... மனசுல, உடம்புல பலம் இருந்தது... அதுவும் காயந்தான்... வலிதான்... ஆறு தழும்பு தட்டிப் போச்சு...

''நான் காய்ச்ச மரம்... அப்பாவையும் இழந்துட்டு, இந்த வயசுல என்னால இந்த பாவிகளோட கல்லடிகளை தாங்க முடியலே மாமி...'' அம்மா பெரிதாகக் குரலெடுத்து, தேம்பித் தேம்பி அழத் தொடங்க,

வாசலில் டாக்ஸி, ஹாரன் அடிக்கிறது.

## அடுத்த இதழில்...

''பட்டுக் கோட்டைக்குப் பக்கத்திலிருக்கும் கடற்கரைப் பகுதியான மனோரா இதுவரை கவனிக்கப்படாமல் இருந்துவிட்டாலும் இனி அது சுற்றுலா மையமாக்கப்படும்!'' என்று அமைச்சர் ஆர். எம். வீரப்பன் சட்ட சபையில் பேசியிருக்கிறார்.

அப்படி என்னதான் இருக்கிறது மனோராவில்? அடுத்த வாரம் பாருங்கள்!

# மனம் கவருமா மனோரா?



## நீங்கள் கேட்டவை

* கே. வைத்தியநாதேஸ்வரன், நெய்வேலி.

? தமிழகத்தில் லஞ்ச ஊழல் குற்றச்சாட்டிற்காகச் சமீப காலங்களில் யாருமே கைதாகவில்லையே! லஞ்ச ஊழல் அடியோடு ஒழிக்கப்பட்டு விட்டதைத்தானே இது காட்டுகிறது?

! ரொம்பவும் கிண்டல்காரர் நீங்கள். தமிழக அரசை இப்படியா கேலி செய்வது!

* கே. ஜி. எஃப். பழனிச்சாமி, பெங்களூர்—10.

? கவிஞர் கண்ணதாசன் இல்லாமல் போய் விட்டாரே என்று நினைத்து நீங்கள் என்றாவது வருத்தப்பட்டதுண்டா?

! என்றாவது என்ன? இப்போது ரேடியோவில் ஒலிபரப்பப்படும் பல திரைப்படப் பாடல்களைக் கேட்கும்போதெல்லாம் அந்த வருத்தம் வந்து வாட்டுவதுண்டு.

* எம். சந்திரிகா, லால்குடி

? குஜராத் அரசு பத்திரிகை சுதந்திரத்தைப் பறிக்க முயன்றிருக்கிறதே?

! பத்திரிகைச் சுதந்திரத்தைப் பறிக்க முயலும் எந்த அரசும் உருப்பட்டதில்லை என்பதற்கு ஏராளமான உதாரணங்களைச் சொல்ல முடியும். "ஸோலன்கி அமைச்சரவை ஆட்சியில் இருக்கும் தகுதியை இழந்து விட்டது" என்று ராம்நாத்கோயங்கா சூடான அறிக்கை விட்டதன் காரணமாகவே ஸோலன்கியை மத்திய அரசு இன்னும் சில காலம் பதவியில் நீடித்திருக்கச் செய்யலாம். ஆனால் ஜனநாயக தர்மம் வென்றே தீரும்.

* ரேவதி ப்ரியன், ஈரோடு—1.

? நடக்காது எனத் தெரிந்தும் நமது அரசியல்வாதிகளும், அமைச்சர்களும் வாக்குறுதிகளை வாரி வழங்குகிறார்களே?

! நமது மக்களை மாங்காமடையர்கள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டிருப்பதுதான் இதற்குக் காரணம். ஆனால் மக்களுக்கு இவர்களைப் பற்றியும் தெரியும் இவர்களது வாக்குறுதிகளைப் பற்றியும் தெரியும். அவர்கள் வோட்டுப் போடுவது பைசாக்குப் பிரயோஜனமில்லாத இவர்கள் வாக்குறுதிகளுக்காக அல்ல.

* என். செந்தில்குமார், மயிலாடுதுறை—1.

? சமீபத்தில் யாருக்காக வருத்தப்பட்டீர்கள்?

! கனடாவிலிருந்து பம்பாய் வந்து கொண்டிருந்த ஏர் இந்தியா விமானம் அட்லாண்டிக் கடலில் விழுந்து நொறுங்கியதால், அதில் பயணம் செய்த 329 பேரும் இறந்து போனதாகச் செய்தி வந்த போது மனசு நடுங்கிப் போனது. அப்படி இறந்து போனவர்களில், பிரபல இந்திய விஞ்ஞானியான நாயுடம்மாவும் ஒருவர் என்று கேள்விப்பட்டதும், அவரது மனைவி டாக்டர். பவனபாய் சோகம் தாங்காமல் தீக்குளித்ததாகச் செய்தி வந்த போது... மீதமுள்ள குடும்பங்களிலும் என்னென்ன நடந்து கொண்டிருக்குமோ என்று எண்ணிப் பார்த்து எண்ணிப் பார்த்து குலுங்கிப் போனேன்.



* உருவாகும் மரியாதை.

# ரஜனியின் ஆன்மீகப் போக்கு

* வி. ரவிகுமார், லால்குடி—1.

? ரஜனியின் ஆன்மிகப் போக்கு எதைக் காட்டுகிறது?

! சினிமாவின் மூலம் அவருக்குக் கிடைத்திருக்கும் விளம்பரத்திற்கு ஆன்மீகத்தின் மூலம் ஒரு மரியாதையை உருவாக்குகிறார் என்பதைத்தான் காட்டுகிறது.



* சரித்திரம்.



* இழப்பின் வருத்தம்.

* ஏ. எஸ். கணேசன், பாண்டமங்கலம்.

? பட்டதாரிகளுக்குச் சாராயக் கடையில் வேலை கிடைத்தால் அவர்களைப் 'பட்டை' தாரிகள் என அழைக்கலாம் அல்லவா...?

! கிண்டலுக்கும் ஓர் அளவுண்டு. இது மனிதாபிமானத்தோடு பார்க்க வேண்டிய பிரச்னை. பட்டதாரிகள் சாராயக் கடைகளில் வேலை பார்க்கும் நிலை என்பது அரசு மட்டுமல்ல; அனைவரும் வெட்கப்பட வேண்டிய விஷயம்.

* உ. அசோக்பாபு, மணப்பாறை.

? பத்மினி அண்ட் சகோதரிகளோடு, ஊர்.

வசி அண்ட் சகோதரிகளை ஒப்பிடலாமா?

! அவர்கள் ஒரு சரித்திரம்; இவர்கள் ஒரு சம்பவம்.

* எஸ். ரவி, கும்பகோணம்

? ரம்ஜான் விடுமுறை தினத்தில் ஏற்பட்ட குழப்பங்கள் குறித்து?

! தமிழக அரசு செய்து கொண்டிருக்கும் எத்தனையோ குழப்பங்களில் இதுவும் ஒன்று. "ரம்ஜானுக்குக் குறிப்பிட்ட ஒரு நாள் லீவு; தேதி மாறினால் அன்று முஸ்லிம்களுக்கு மட்டும் லீவு" என்ற ஜி. ஓ. வை அரசு வாபஸ் பெற்றிருக்கவே வேண்டாம். பொது மக்களுக்கு எத்தனை கஷ்டம். தேசத்துக்கு எவ்வளவு நஷ்டம்!

என்று பிரஷ்னேவ் எழுதிய அந்த வரிகளைப் படித்த போது உண்மையிலேயே சிலிர்த்துப் போனேன்.

* வெ. ச. தமிழரசன், சிதம்பரம்

? இன்றைய இளைஞர்கள் பெண்ணைத் தேடி, பிறகு பொன்னைத் தேடுவது எதனை உணர்த்துகிறது?

! பட்டினத்தாரைப் படிக்கவில்லை என்று உணர்த்துகிறது.

* கே. கணேசமூர்த்தி, பெங்களூர்— 18.

? நாய் துரத்தி ஓடிய அனுபவம் உண்டா?

! உண்டு. தனியாக அல்ல; நண்பரோடு. ஒருமுறை நண்பர் ஒருவரின் ஸ்கூட்டருக்குப்

# எதைக் காட்டுகிறது?


* வெற்றி ரகசியம்.

* ரா. ஜோதிராமன், நெல்லிக்குப்பம்

? சமீபத்தில் நீங்கள் படித்து முடித்த புத்தகம்?

! காலஞ்சென்ற ரஷ்ய அதிபர் பிரஷ்னேவ் எழுதிய 'போரும் புனர்ஜென்மமும்' என்ற புத்தகம். இரண்டாம் உலகப் போரில் ஏற்பட்ட படுநாசத்திலிருந்து ரஷ்யா மீண்டு வரக் குறைந்தபட்சம் இருபத்தைந்து ஆண்டுகளாவது ஆகும் என்று ஹிட்லரின் தளபதி ஜெனரல் ஸ்டுல்ப் நாகல் ஹிட்லருக்குச் சமாதானம் சொன்னாராம். நாசத்தின் அளவுகளைக் கணக்கெடுத்த சர்வதேச ஸ்தாபனங்களும் ஸ்டுல்ப் நாகலின் கூற்றையே உறுதிப்படுத்தினவாம். ஆனாலும் 'அந்த நாசத்திலிருந்து மீண்டு பழைய நிலைக்கு நாங்கள் திரும்பி வர எங்களுக்கு இருபத்தைந்து மாதங்கள் கூட ஆகவில்லை. காரணம், எங்கள் தேசத்தில் ஏற்பட்ட நாசங்களைக் கணக்கெடுத்துச் சொன்ன அவர்களெல்லாம், எங்கள் மக்களின் ஜீவசக்தி, எங்கள் மக்களின் தேசபக்தி, எங்கள் கட்சியின் உறுதியான வழிகாட்டுதல் ஆகிய மூன்றையும் விட்டுவிட்டுக் கணக்குப் போட்டு விட்டார்கள். இந்த மூன்றும்தான் எங்கள் வெற்றியின் ரகசியம்!'

பின்னால் உட்கார்ந்து கொண்டு சென்றேன். ஒரு குடிசைப் பகுதியின் பக்கமாக ஸ்கூட்டர் சென்று கொண்டிருந்த போது ஒரு நாய் எங்களைக் குறி வைத்துத் துரத்த ஆரம்பிக்கவே நண்பர் பயந்து போய் ஸ்கூட்டரை வேகமாய்... அதிவேகமாய்... ஓட்டக் கடைசியில் ஒரு சுவரில் மோதித்தான் நிற்க வேண்டியதாயிற்று. நல்லவேளையாகக் காயம் ஏதும் படவில்லை. உருப்படியான காரியங்களைச் செய்வதற்குத் துப்பில்லாத சென்னை மாநகராட்சி குறைந்த பட்சம் இது மாதிரியான தெருவோர நாய்களையாவது பிடித்துக் கொண்டிருக்கலாம். செய்வார்களா?

* கே. ஸ்ரீகுமார், சென்னை— 112.

? தேசிய நிகழ்ச்சிகளுக்கு அவ்வப்போது டெலிவிஷனில் காட்டப்படும் தமிழ் விளக்கங்களைப் பார்த்தீர்களா, எப்படி?

! கொடுமை அய்யா கொடுமை! அண்மையில் ஓர் இந்துஸ்தானி இசை நிகழ்ச்சி. அதற்கு எழுதிக் காட்டப்பட்ட தமிழ் விளக்கம் எப்படித் தெரியுமா? 'ராக்!', 'பக்வாஜ்' என்று! இதுதான் தமிழ் விளக்கமா? யாருக்குக் கண் துடைப்புச் செய்கிறார்கள் இந்த டெலிவிஷன்காரர்கள்? பொறுத்துக் கொள்ள முடியாத அட்டூழியம்!


* சூடான அறிக்கை.


* மனம் நடுங்கியது.

* ரூ 10 பரிசு பெறுபவர்:

எம். சந்திரிகா,
D/o. ஆர். மோகன்,
40, ஓமக்குளத் தெரு,
லால்குடி— 621 601.

- தராசு

# சிறுமை கண்டு பொங்குவாய்! எளிமை கண்டு இரங்குவாய்!

இளைஞர் ஆண்டான இந்த ஆண்டில், சுவாமி விவேகானந்தர் பிறந்த தினமான ஜனவரி 12-ல் சென்னையில் ஒரு பிரபலமான தியேட்டரில் **'Shaolin Temple'** சினிமா பார்க்க நானும் என் குடும்பத்தினரும் சென்றிருந்தோம். அப்போது காண நேர்ந்த ஒரு மனநிறைவான காட்சியை கல்கி வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதில் மனமகிழ்ச்சி அடைகிறேன்.

நாங்கள் வெளியில் நின்றிருந்த போது, நாற்பது வயது மதிக்கத் தக்க ஒருவர், கையில் மாவுக் கட்டுடன் கள்ள விழி விழித்து, கள்ள மார்க்கெட்டில் டிக்கெட் விற்றுக் கொண்டிருந்தார். அப்போது ஒரு இளைஞன் அங்கு வந்து அவர் கையிலிருந்த டிக்கெட்டுக்களைப் பிடுங்கி கிழித்துப் போட்டு, பணத்தையும் பிடுங்கிக் கொண்டு அவரை ''மரியாதையான தொழில் செய்யாமல் இது என்ன பிழைப்பு'' என்று பலவாறு திட்டினான். அவர் அங்கேயே உட்கார்ந்து அழ ஆரம்பித்தார்.

அந்த இளைஞர் சற்று நேரம் கழித்து அவரிடம் சென்று பணத்தையும் திருப்பிக் கொடுத்து, அவருடைய அழுக்குக் கைகளைப் பிடித்தெழுப்பி, அவர் கையைப் பிடித்தவாறே சற்று தூரம் சென்று, 'இனிமேல் இப்படியெல்லாம் செய்யாதீர்கள்' என்று பலவாறு அறிவுரை கூறினான்.

எங்கள் பின் நின்று கொண்டிருந்த இரண்டு தியேட்டர் சிப்பந்திகள் 'வேறொரு முதலாளின்னா இந்நேரம் போலீசை அழைச்சிருப்பாரு. நம்ப முதலாளி குணமே தனிதான். பார்த்தியா. எவ்வளவு நல்லவரா



யிருந்தால் அவன் கையைப் பிடிச்சு வெளியே கூட்டிக்கிட்டு போறாரு.'' என்று பேசிக் கொண்டிருந்தது காதில் பட்டதும்தான் அவ்விளைஞன்தான் அந்தத்திரையரங்கின் உரிமையாளன் என்பது உணர முடிய, ''இந்த சின்ன வயதில் பணத்திமிர் சிறிதும் இல்லாது, இவ்வளவு எளிமையா?'' என்று ஆச்சரியமாய் உணர்ந்தேன்.

தீமை கண்டு பொங்கச் சொன்ன மகாகவிக்கு செவி கொடுத்து, முதலில் தீமை கண்டு பொங்கி, பின் எளிமை கண்டவுடன் **இரங்கிய அவ்விளைஞனை வாழ்த்துகிறேன்!**

வி. கீதா,
முதுகலை முதலாமாண்டு (இயற்பியல்),
த. பே. மா. ஓ. கல்லூரி,
பொறையார்-609 307.

## லாட்டரி சீட்டு



வாங்குபவரை
ஏமாற்றிவிட்டு
விற்பவரை
மட்டுமே
லட்சாதிபதியாக்கும்
அரசாங்க
காகிதம்.

பி. சுவாமிநாதன்,
இளமறிவியல்கணிதம்,(மூன்றாம் ஆண்டு)
அரசினர் ஆடவர் கலைக்கல்லூரி,
கும்பகோணம்-612 001.



## அமாவாசை

மாதம் ஒருமுறை—
வானம்
அமுல்படுத்தும்
பரிபூரண
'பவர்கட்.'

## வானவில்

வான தேசத்தின்
ஏழு வர்ண
தேசியக் கொடி!

எஸ். குருமூர்த்தி,
8-ஆம் வகுப்பு 'பி' பிரிவு,
ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி,
பாபநாசம்-614 205.
தஞ்சாவூர் மாவட்டம்.



# ஹெல்மெட் அணிவதால்



# ஒரு பயனும் இல்…

தற்போது மோட்டார் சைக்கிள் ஓட்டுவோர் ஹெல்மெட் அணிவது கட்டாயமாக்கப்பட்டுள்ளது. ஆனால் ஹெல்மெட்டுகளால் பயனே இல்லை என்று 'நியூ சயன்டிஸ்ட்' வார இதழ் கூறுகிறது.

சில ஹெல்மெட்டுகள் சில வித காயங்களைத் தவிர்க்கின்றன; மற்றவை தலைக்குக் கொஞ்சமும் பாதுகாப்பு அளிப்பதில்லை என்கிறார் லுண்ட் யுனிவர்சிடியைச் சேர்ந்த பீட்டர் கிராண்ட்ஸ். அவற்றின் வடிவமைப்பில் பெரும் மாறுதல்கள் செய்ய வேண்டும் என்கிறார் அவர். தற்கால ஹெல்மெட்டுகளைத் தயாரிக்கப் பயன்படும் பொருள்களை அவர் குறை கூறுவதுடன், அவை தலைக்கு அளிக்கும் பாதுகாப்பும் போதாது என்கிறார்.

ஸ்வீடனில் மோட்டார் சைக்கிள் விபத்தில் இறந்த 152 நபர்களின் உடல்களைப் போஸ்ட் மார்ட்டம் செய்து பார்த்ததில், பாதிப் பேருக்கு மேல் தலைக் காயங்களினால் இறக்கவில்லை என தெரிந்தது. கழுத்தும் தலையும் சேருமிடத்தில் ஏற்பட்ட பலத்த அடி காரணமாகவே உயிர் போயிருந்தது.

தற்போது உள்ள ஹெல்மெட்டுகள் தலையின் கன பரிமாணத்தைச் சுமார் 20 சதவீதம் அதிகரிக்கச் செய்து கழுத்துப் புறம் அழுத்துவதால், கீழே விழும்போது பலத்த அடிபடுகிறது என கிராண்ட்ஸ் நம்புகிறார். தவிர முகக் காயங்களைத் தவிர்க்க ஹெல்மெட்டுகள் எந்த விதத்திலும் உதவுவதில்லை என்கிறார். அவர் செய்த ஆராய்ச்சிகளின் மூலம் இன்னொரு ஆச்சரியமான விஷயமும் தெரிய வந்தது, மோட்டார் சைக்கிள் ஓட்டி கீழே விழும் போது ஏற்படும் தலை அதிர்ச்சிக்கும் மண்டை ஓட்டில் படும் காயத்துக்கும் நெருங்கிய தொடர்பு இருந்த போதிலும், ஹெல்மெட் அணிந்தாலும், அணியாவிட்டாலும் இந்தக் காயம் ஏற்படுகிறது என்பதுதான் அது!

இப்படி அவர் அந்தப் பத்திரிகையில் கூறியிருப்பது சரிதானா? நியூரோ சர்ஜன் டாக்டர் எஸ். கல்யாணராமனின் பதில் கடைசிப் பக்கத்தில்...

தகவல்: **கனியூர் சீனிவாசன்.**

- படத்தில் பாலசுப்பிரமணியம், புவனேஸ்வரி பாலசுப்பிரமணியம்.

படம்: யோகா.

எதிர்காலம் உங்கள் கையில்

# பத்திரிகைத் துறையில் வேலை வாய்ப்பு

இந்த வாரம் பத்திரிகைத் துறையில் இருக்கிற வேலை வாய்ப்புகள் பற்றி எழுதுவதற்காக, நமது நிருபர் தினமணிக்கதிர் ஆசிரியர் திரு. கஸ்தூரி ரங்கனைச் சந்தித்துப் பேசினார். திரு. கஸ்தூரி ரங்கன் தெரிவித்த கருத்துக்களின் தொகுப்பு:

### பட்டப்படிப்பு:

பத்திரிகைத்துறையில் குறைந்தபட்ச கல்வித் தகுதியே பட்டப்படிப்பு என்பது இன்றைய நிலை. இது தவிர ஜர்னலிசத்தில் டிப்ளமா அல்லது டிகிரி வாங்கியிருந்தால் சுலபமாக வேலை கிடைத்துவிடும்.

இந்தப் படிப்பு இந்தியாவில் ஒரு சில பல்கலைக் கழகங்களில் மட்டுமே சொல்லித் தரப்படுகிறது. சிலர் தபால் மூலமும் சொல்லித் தருகின்றனர். ஆனால் தபால் வழிப் படிப்பு நேர்முகப் படிப்பைப் போல அவ்வளவு எஃபக்டிவாக இருக்குமா என்பது சந்தேகமே!

### ஆர்வம் அவசியம்:

பொதுவாக இந்தத் துறையில் நுழையத் துடிப்பவர்களுக்கு எழுத வேண்டுமென்கிற உந்துதல் அவசியம் தேவை. எந்த வேலையும் இல்லாததற்கு ஏதோ இது கிடைக்கிறதே என்ற மனப்போக்கு கூடாது. இங்கே எழுத்துத் திறமை தவிர டைப்பிங் திறமை அவசியம். இன்றுள்ள நவீன சூழ்நிலையில் ஷார்ட்ஹாண்ட் முக்கிய கண்டிஷனும் இல்லை.

பேச்சு மட்டுமின்றி எந்த விஷயத்தையும் ஒரு தடவை கேட்கையிலேயே கிரகித்து, அதிலுள்ள முக்கியமான விஷயங்களை மட்டும் சுருக்கமாயும் அதே சமயத்தில் எளிதாய்ப் புரியும்படியும் ரிப்போர்ட் செய்கிற திறமை அவசியம். வேலைக்குத் தேர்ந்தெடுக்கும் போது இந்தத் திறமையைத்தான் சோதிப்பார்கள். ஆழ்ந்த பொது அறிவு மற்றும் மொழி பெயர்ப்புத் திறமை அவசியம்.

### தேர்ந்தெடுப்பு முறை:

இங்கே எல்லாப் பத்திரிகைகளுக்குமாய்ச் சேர்த்து, பொதுப் பரீட்சை வைத்துத் தேர்ந்தெடுப்பது இல்லை. அந்தந்தப் பத்திரிகையோ — செய்தி நிறுவனமோ தங்களுக்குத் தேவையான எண்ணிக்கையில் ரிப்போர்ட்டர்கள், ரிப்போர்ட்டர் டிரெய்னிகள், ஸப்ரூப் ரீடர்கள் என்று தேர்ந்தெடுத்துக் கொள்கின்றன. தவிர, உதவி ஆசிரியர், துணை ஆசிரியர் போன்ற பதவிகளுக்கும் சான்ஸ் உண்டு. டி.வி. மற்றும் ரேடியோ செய்திப் பிரிவுகளிலும் நிருபர் பதவிக்கு ஆட்கள் தேர்ந்தெடுக்கப்படுவர்.

### அரசாங்கத்தில்:

மத்திய, மாநில அரசுகளிலும், கம்பெனி மற்றும் எல்லாவற்றிலும் பொது ஜனத் தொடர்பாளர் பதவிக்கு மற்றவர்களைவிட ஜர்னலிஸ்டுகளுக்கு நிறைய வாய்ப்பு உண்டு. பிரகாசமான எதிர்காலமும் உண்டு.

### சம்பளம்:

அரசாங்கம் விதித்துள்ளதன்படி, நல்ல சம்பள விகிதம் அமலில் உள்ளது. இதுதவிர, பஸ் கட்டணச் சலுகை போன்ற இன்ன பிற வசதிகளும் உண்டு.

சில சின்ன ஊர்களிலிருந்து அவ்வப்போது எழுதுகிற நிருபர்களும் உண்டு. இவர்களுக்கு வெளியாகிற ரிப்போர்ட்டில் ஒரு சென்டிமீட்டருக்கு இத்தனை ரூபாய் என்று கணக்குப் போட்டுப் பணம் தருவார்கள்.

### இன்னொரு ஜாதி:

ஃப்ரீ லான்ஸர் என்று ஒரு பத்திரிக்கையாளர் ஜாதி உண்டு. இவர்கள் எந்தப் பத்திரிக்கை சம்பளப் பட்டியலிலும் இருக்க மாட்டார்கள். அதேசமயம் எல்லாப் பத்திரி -கைகளுக்கும் கட்டுரை, பேட்டி செய்தி, இத்யாதிகள் எழுதி, அதற்கேற்பச் சன்மானம் பெறுவர்.

### ஜோக்ஸ்:

மேலும், தகவல் துணுக்குகள், ஜோக்ஸ், பிறமொழிப் பத்திரி கைகளில் வெளியான செய்திகளின் மொழி பெயர்ப்பு இவையெல்லாம் எழுதிக் கொஞ்சம் சம்பாதிக்கலாம். (பி. கு: 'நான் எழுதிய ஜோக்கைப் போட்டார்கள். ஆனால் பணமே அனுப்பவில்லை. இந்தப் பத்திரிகைக்காரர்களே இப்படித்தான்' என்று ஒட்டு மொத்தமான புகார் சொல்லாதீர். பெரும்பாலானவர்கள் ஒழுங்காகப் பணம் அனுப்புகின்றனர், ஒரு சிலரைத் தவிர!

பேசாமல் அவற்றுக்கு எழுதாமல் இருந்து விடுங்களேன்!)

தகவல்: **எஸ். சந்திரமௌலி.**

* மிஜோராம் பத்திரிகையாளர்களுடன் பிரதமர் பேசுகிறார்...





ஒருவர்: காணாமல் போன என் மகனிடம் இருந்து கடிதம் வந்திருக்கு.

மற்றவர்: அப்படியா! என்ன எழுதி இருக்கான்?

ஒருவர்: அவன் காணாமல் போன விவரத்தை பேப்பரிலும், டி.வி.யிலும் போட்டோவுடன் விளம்பரப்படுத்தினால் தான் வீட்டிற்குத் திரும்ப வருவானாம்.

—ஆர். சாந்தகுமார்.

இரண்டு சிப்பாய்கள் பேசிக் கொண்டிருந்தனர்.

''நீ ஏன் பட்டாளத்தில் சேர்ந்தாய்?''

''எனக்கு மனைவி இல்லை. மேலும் நான் போரை நேசித்ததால் சேர்ந்தேன்! நீ?''

''எனக்கு மனைவி இருந்தாள். மேலும் நான் அமைதியை நேசித்தேன். அதனால் தான்!''

நன்றி: மிர்ரர்.
—ராம்கி.





முதலாளி: வாடிக்கையாளர்கள் எல்லோரும் நீ அளந்து கொடுக்கும் துணியின் அளவு குறைவாக உள்ளது என்று புகார் செய்திருக்கிறார்கள். இதற்கு முன் என்ன செய்து கொண்டிருந்தாய்?

வேலைக்காரர்: பூ வியாபாரம் செய்து கொண்டிருந்தேன்!

—தி. சுந்தரேசன்.



''ஏண்டா! 'கஸ்டம்ஸ்'னு ஏன் பேர் வந்தது?''

''அயல் நாட்டிலிருந்து வருபவர்களுக்கு நிறைய கஷ்டம் தருவதால் தான்!''

—ஜெயின் சேகர்.

—டாக்டர் கல்யாணராமன் கூறுகிறார்:

# "தலையை மதிக்கவில்லை என்றால்...

# ...ஹெல்மெட் அணிய வேண்டாம்"

"முதலில் ஒரு உதாரணம் சொல்கிறேன். பரீட்சையில் பாஸ் பண்ண 35 மார்க் வாங்க வேண்டும். எழுதினவர்களுக்கெல்லாம் ஐந்து மார்க் அதிகப்படியாய்த் தர முடிவெடுக்கப்படுகிறது. எழுபது, எண்பது மார்க் வாங்கினவர்களுக்கு இந்த ஐந்து மார்க்கினால் அதிக பயன் இல்லை. அதேபோல, பத்து, பதினைந்து வாங்கினவர்களும் இதனால் பலனடையப் போவதில்லை. ஆனால் முப்பது வாங்கியுள்ள பார்டர் கேஸ்கள் பாஸாகலாம் இல்லையா? அந்த 'அதிகப்படி மார்க்' போன்றதுதான் இந்த ஹெல்மெட் விஷயமும். தலைக்கு ஒருவிதப் பாதுகாப்பு. இதனால் விபத்தில் சாவு எண்ணிக்கை நிச்சயம் குறையும்.

"இன்னொரு விஷயமும் கவனிக்க வேண்டும். ஹெல்மெட் போட்டுக்கொண்டாலே, தானாகவே ஜாக்கிரதையாய் ஓட்ட வேண்டும் என்று ஒருவித உள்ளுணர்வு — கட்டுப்பாடு உணர்வு வந்துவிடும். இதுவே பல விபத்துக்களைத் தடுத்துவிடும்.

"இன்னும் சொல்ல வேண்டுமென்றால், இன்று ஸ்கூட்டர் போன்றவற்றில் போகிறவர்கள் நடுத்தரக் குடும்பத்தினர்; இவர்களை நம்பித்தான் இவர்களின் குடும்பங்கள் இருக்கின்றன. இந்த நிலையில் இவர்களுக்கு ஏதாவது ஆகிவிட்டால் — மரணம் கூட இல்லை, உடல் ஊனமேற்பட்டுவிட்டால் கூட — இவர்களது குடும்பத்தின் நிலை என்ன ஆகும் என்று ஒரு கணம் யோசித்துப் பார்த்தால், தானாகவே ஹெல்மெட் அணிய ஆரம்பித்து விடுவார்கள்.

ஒரு வருடத்துக்குமுன் வாகன விபத்தில் மாட்டிக்கொண்ட ஒருவர், இவ்வளவு கால சிகிச்சைக்குப் பிறகு, நேற்றுத்தான் டிஸ்சார்ஜ் ஆகிப் போனார். இதுபோல நிறைய கேஸ்கள். இவர்கள் ஹெல்மெட் அணிந்து கொண்டிருந்திருந்தால் நிச்சயம் தப்பித்திருக்கலாம்.

"வாங்குகிற ஹெல்மெட்டை, ஐ.எஸ்.ஐ. முத்திரை இருக்கிறதாய்ப் பார்த்து வாங்க வேண்டும். விலை குறைவு என்று ஏதோ ஒன்றை வாங்கிவிட்டு, விபத்தில் ஹெல்மெட் காப்பாற்றவில்லையே என்று குறை சொன்னால் எப்படி நியாயமாகும்?

"ஹெல்மெட்டுகளின் வடிவமைப்பில் மாறுதல்கள் செய்ய வேண்டுமென்கிறார் பீட்டர் கிராண்ட். காலப் போக்கில், எதில்தான் மாறுதல் அவசியமில்லை? இதற்கும் உதாரணம் சொல்லலாம். இன்னும் சிறப்பாய் வாகனங்களில் பிரேக் ஸிஸ்டங்கள் அமைப்பது பற்றி ஆராய்கிறார்கள். அதற்காக இப்போதுள்ள பிரேக்குகளைத் தூக்கி எறிந்து விடலாமா என்ன?

"ஸ்வீடனில் நடந்த கணக்கெடுப்பின்படி, '152 பேரில் பாதிக்கு மேலானவர்கள் தலைக் காயத்தால் இறக்கவில்லை' என்கிறார். நான் கேட்கிறேன், ஹெல்மெட் போட்டிருந்தால் தலை காயத்தால் இறந்தார்களே அவர்களாவது பிழைத்திருப்பார்கள் இல்லையா?'

"மூக்கக் காயங்களை ஹெல்மெட்டுகள் தடுப்பதில்லை என்கிறார் அவர். ஹெல்மெட் தலையைக் காப்பாற்றத்தான். உடலில் ஒவ்வொரு பகுதியையும் காப்பாற்றிக் கொள்ள வேண்டுமென்றால், போர்க் கவசம் அணிந்துகொண்டுதான் வாகனம் ஓட்ட வேண்டும்.

"ஹெல்மெட்டுகளின் விலை அதிகம்; அதைப் பத்திரமாக வைக்க வழிமுறைகள் இல்லை என்பதெல்லாம் ஒப்புக்கொள்ள முடியாத வீண் வாதங்கள்.

இன்று ஒரு ஹெல்மெட் விலை இருநூறு ரூபாய் என்று வைத்துக்கொள்வோம். சுமார் ஐந்து வருடங்களாவது இதைப் பயன்படுத்தலாம். கணக்குப் போட்டுப் பார்த்தால் தினத்துக்குச் சுமார் பத்துப் பன்னிரெண்டு பைசா ஆகும்; அவ்வளவுதான்! உங்கள் உயிர் — தலை தினம் பன்னிரெண்டு பைசா மதிப்புக் கூடப் பெறாது என்று நினைக்கிறீர்கள்? அப்படி நீங்கள் நினைத்தால் தாராளமாய் ஹெல்மெட் இல்லாமல் போங்கள், நான் தடுக்க மாட்டேன்!"

சந்திப்பு: ஜானி.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032· (Phohe: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

"ஸ்டேஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள்-வசதிக்கு வசதி, சுகத்துக்கு சுகம், விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்கிறேன்"

## பெல்ட் இல்லை, நாடா இல்லை, கவலை இல்லை!



**உரியுங்கள்... ஒட்டுங்கள்:**
இறுக்கமாக அணிந்துள்ள பேன்ட்டியின்மீது ஒட்டும் பகுதியை வைத்து அழுத்துங்கள்.

ஸ்டேஃப்ரீ பெல்ட் இல்லாத நேப்கின்கள் இருந்துவிட்டால், பெல்ட், நாடா, ஊசி, ஹூக் என்று எதைப்பற்றியுமே நான் கவலைப்பட வேண்டியதில்லை. முண்டு, முடிச்சு கிடையாது. வெட்டு, சிராய்ப்பு எதுவுமில்லை. எவ்விதமான அசௌகர்யமும் இல்லை.

ஸ்டேஃப்ரீயில் உள்ள ஒப்பற்ற ஒட்டும்பகுதி, நேப்கினைக் கச்சிதமாகப் பொருந்த வைக்கிறது. அணிவது சுலபம், மாற்றுவதும் எளிது. சாதாரண நேப்கினைவிட, ஸ்டேஃப்ரீ மிகவும் வசதியானது, சுகமளிப்பது.

ஸ்டேஃப்ரீ என் உடலோடு ஒட்டி உறவாடுவதுடன், உயர்ந்த பாதுகாப்பும் அளிக்கிறது. அதை அணிந்து என் மனம் விரும்பியதைச் செய்யமுடிகிறது. விரும்பியதை அணியவும், கவலையின்றி வெளியில், விரும்பிய இடத்திற்கு சென்றுவரவும் முடிகிறது.

**அதுமட்டுமா? உங்களுக்குத் தேவையான சுகாதாரப் பாதுகாப்பு அனைத்தும் கிடைக்கிறது.**

ஒரு முறை அணிந்து நேப்கினை ஸ்டேஃப்ரீயில் அதிக உறிஞ்சும் தன்மை கொண்ட உள்-அடுக்குகள் அமைந்துள்ளன. அத்துடன் 3-வழி லீக் ப்ரூஃப் பிளாஸ்டிக்-ஷீட்டும் இருப்பதால் கறை படியுமோ என்ற கவலை ஒருபோதும் இல்லை. மேலும் இதில் அதி மென்மையான விசேஷ ஒண்டர்ராப் அமைந்திருப்பதால் ஈர உணர்வு சிறிதுமின்றி எப்போதும் உற்சாகத்துடன் உங்களால் உலாவ முடிகிறது.




**விடுதலை உணர்வுடன் விரும்பியதைச் செய்திட ஸ்டேஃப்ரீ**

Johnson & Johnson

REGISTERED No. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# உங்களுக்குப் பிடித்ததைத் தேர்ந்தெடுங்கள்.

ரஸ்னு, ஸாஃப்ட் ட்ரிங்கில் இதுவரை கிடைத்திராத சுவை நாவில் நீர் ஊறும் நறுமணங்களை வழங்குகிறது.

**ஆரஞ்ச், அனுஸி, எலுமிச்சை, காலாகட்டா, மிக்ஸ் ஃப்ரூட், ரோஜா, தன்னுரி, மசாலா மில்க், மசாலா சோடா.**

ஒன்பது நறுமணங்கள். ஏனெனில் சுவைக்கு சுவை வித்தியாசம் உண்டு. எனவே அடுத்தமுறை உங்களுக்கு ஸாஃப்ட் ட்ரிங்க் வேண்டுமென்றால் சுலபமாகத் தயாரிக்கக்கூடிய ரஸ்னு பேக்கை திறங்கள். உங்களுக்குக் கிடைப்பதோ கோலாகலமூட்டும் 1-லிருந்து 32 டம்ளர்க சாதாரணமாகவோ அல்லது ஐஸ் மற்றும் சோடாவில் சேர்த்து அருந்தலாம். உங்கள் ருசியைத் திருப்திப் படுத்த இதுபோன்ற அருமையானதொன்று கிடைத்ததில்லை.






## ரஸ்னு

ஸாஃப்ட் ட்ரிங்க் கான்ஸென்ட்ரேட்
**சுவைமிக்கது
சிக்கனமானது
பல நறுமணங்கள்
கொண்டது.**

குவைத், தோஹா, பாஹ்ரின், மோரிஷியஸ், செய்ஸ்ரோ, கார்டூம், லூஸாகா, நெய்ரோபி, ஜெட்டா, ஓஸ்லோ, லண்டனில்கூட கிடைக்கிறது.

தயாரிப்பவர்கள்: பயோமா இண்டஸ்ட்ரீஸ், அஸ்லாலி, அஹமதாபாத்-380 016

Mudra:A:PI:2119 TA